உ

கடவுள் துணை.

# சர்வசமய சமரசக் கீர்த்தனைகள்.

இவை.

மாயூரம் மாஜிமுன்சீப்

ச. வேதநாயகம்பிள்ளை

அவர்களாலியற்றியகீர்த்தனைகள்.

முழுமையும் பதிப்பியாம லிருந்ததையும்

சில அச்சுக்கூடத்தாரால் பதிப்பித்ததையும்

அருட்கவி கி-ஊ-பா.

கங்காதர நாவல ரவர்களால்

பரிசோதிக்கலுற்ற

பிரதிக்கிணங்க.

சென்னை

பிடாரித்தாங்கல்

நாராயணசாமிமுதலியார்குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1906.

சென்னைபிரம்பூர்குயப்பேட்டை 65 வது, நெம்பர்வீடு.

☞ அதிககீர்த்தனைகள்சேர்ந்த திருத்தமானபதிப்பு.

உ

கடவுள் துணை.

# விளம்பரம்.

சீர்மையிலிருந்து வரவழைக்கப்பட்ட



எங்களுடைய

ரோஜாப்பு மொட்டை

பரிட்சித்துப்பாருங்கள்



ரோஜாப்பு மொட்டு என்பது

# ஒருஷோக்மோதிரம்.

இந்தமோதிரமானது அன்றுஅரும்பி இதழ்மலர்ந்தமொட்டை நடுவில் உடையதுபோல பிரகாசிக்கும் பார்வைக்கு மிக்கபகட்ட யும்சோபிதமாயுமிருக்கப்பட்ட 9-போலி ரவைகள்வைத்து இழை த்தது இது இங்லாண்டு கெமிகல்கோள்டு யென்னும் ஒருவித லோ கத்தாற்செய்து விராகனிடை 8-ரூபா விலையுடைய சுயத்தங்கத் னால் மேற்பூசலும் பூசப்பட்டது. இந்தமோதிரத்தில் எண்ணைப்ப ட்டாலும் ஜலம்பட்டாலும் பளபளப்பு மங்குகிறதில்லை கொஞ்ச காந்தி குறைந்தபோதிலும் சீமைசுண்ணாம்பு பூசிவைத்து புருவ னால் துடைத்து விட்டால் மறுபடியும் பிரகாசிக்கும் இந்தமோதி த்திற்கும் ஜெனங்கள்2,000 ரூபாய் விலையிருக்குமேயென்று மதி பிடுவதற்கு அஞ்சமாட்டார்கள்.—இதன் விலை 2 ரூபாய்தான் வி. பி. தபாற்கூலி பிரத்தியேகம்.

8 - மோதிரத்திற்கு மல்பீஸ் இனாம்.

8 - எட்டு மோதிரங்கள் ஒரேதடவையில் வாங்குவோருக்கு ணயமானதாய் (ஒரு பீஸ் சலவைமல்) அதாவது 20- கெஜமுழ யதான் இனாமாய் அனுப்பப்படும்.

4 - மோதிரத்திற்கு இனாம்.

4 - நாலு மோதிரம் ஒரேதடவையில் வாங்குவோருக்கு சா பட்டன் ஒருசெட்டு இனாமாய் அனுப்பப்படும்.

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தலைவர்.

☞ பி. நா. சிதம்பரமுதலியார்.

உ

கடவுள் துணை.

சர்வசமயசமரசக்கீர்த்தனைகளின்

# அகராதி.


| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். |
|---|---|---|
| அடித்தாலும் | ௧௯௮ | ௧௯௧ |
| அனுதினம் இந்தப்படி | ௧௭௰ | ௧௫௨ |
| அந்தப்பெரியதுரை | ௧௮௰ | ௧௬௨ |
| அபயம்நீயருளுவாய் | ௭௪ | ௬௭ |
| அப்பா இதென்ன | ௧௭௮ | ௧௬௰ |
| அப்போதுனைத்தொழில் | ௩௭ | ௩௬ |
| அம்புயப்பதம் | ௩௰ | ௩௭ |
| அருள்புரிவாயே | ௰ | ௰௧ |
| ☞ அருமைமைத்துன | ௨௱௭ | ௨௱௫ |
| ஆண்டருளே | ௮ | ௯ |
| ஆதரித்திடநல்ல | ௪௯ | ௪௬ |
| ஆதிபரமநாதாஞான | ௫௩ | ௫௰ |
| ஆதிபரமநாதாநல்ல | ௫௭ | ௫௩ |
| ஆதிமூலனே | ௧௩௩ | ௧௧௨ |
| ஆதியேபரஞ்சோதி | ௨௭ | ௨௮ |
| ஆரணமயநய | ௭௭ | ௬௯ |
| ஆர்வேணுமோ | ௧௮௮ | ௧௭௨ |
| ஆளாயோஎனையே | ௧௩௯ | ௧௧௭ |
| ஆள்வாயெனதுளம் | ௨௪ | ௨௫ |
| இந்த உத்தியோகம் | ௧௮௩ | ௧௬௬ |
| இந்த உபகாரம் | ௧௯ | ௨௰ |
| இந்த நிமிஷமே | ௧௮ | ௧௯ |
| இந்தப் பிழைகளெல்லாம் | ௧௬ | ௧௬ |
| இந்தமனம் | ௧௩௫ | ௧௧௩ |

| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். |
| --- | --- | --- |
| இந்தவரந்தருவாய் சுவாமி | ௧௫ | ௧௬ |
| இந்தவரந்தருவாய் | ௫௪ | ௫௧ |
| இந்தவழக்குக்கெல்லாம் | ௧௭௭ | ௧௫௯ |
| இந்தவேளை | ௯௰ | ௭௯ |
| இப்படிப்பட்டநான் | ௧௨௰ | ௱௨ |
| இரக்கஞ்செய்வாயே | ௫௯ | ௫௪ |
| இவளவுதான் | ௪௮ | ௪௫ |
| இனியாகிலுமனமே | ௧௪௪ | ௧௨௨ |
| இன்னமுந்தாமதம் | ௮௭ | ௭௭ |
| இன்னம்தாமசம் | ௭௯ | ௭௰ |
| இன்னமும் என் மீது | ௧௧௯ | ௱௧ |
| இன்னம்தான் பராமுகமோ | ௧௨௭ | ௱௮ |
| இன்னம்பராமுகம்ஏதோ | ௬௧ | ௫௬ |
| இன்னம்பராமுகமாமோ | ௧௨௩ | ௱௫ |
| ஈசனேமலநாசனே | ௩௫ | ௩௫ |
| ஈசாநின் | ௨௬ | ௨௭ |
| உடலைநம்பாதே | ௧௬௰ | ௧௪௧ |
| ☞ உடலைநம்பாதே | ௧௬௧ | ௧௪௩ |
| உதவிசெய்ய | ௯௪ | ௮௨ |
| உய்யும்வகை | ௧௬௮ | ௧௫௰ |
| உற்றவரேஎனை | ௧௯௰ | ௧௭௫ |
| உனக்கேநமஸ்காரம் | ௧௩௭ | ௧௧௫ |
| உனைநானே | ௮௰ | ௭௧ |
| உன்னிடத்தில் | ௫ | ௭ |
| உன்னைஎனக்கு | ௮௪ | ௭௪ |
| உன்னைத்தவிர | ௮௮ | ௭௭ |
| உன்னைநம்பினேன் | ௫௰ | ௪௭ |
| உன்னைப்போல்எனக்கு | ௱௩ | ௮௯ |
| உன்னைமறவாமல் | ௯௫ | ௮௩ |
| ஊருக்கெல்லாம் | ௨௱ | ௧௯௪ |
| எக்காலமும் | ௧ | ௩ |
| எத்தனைகவி | ௱௩௧ | ௱௰ |
| எத்தனையானாலும் | ௧௯௯ | ௧௯௨ |
| எந்தநாளிலும் | ௱௮௧ | ௧௬ |
| எந்தவிதமும் | ௱௨௧ | ௱௩ |
| எந்தையேஉனக்கும் | ௱௩௬ | ௧௧ |
| எப்படியும்பரமே | ௮௩ | ௭௩ |

| கீர்த்தனைகளின் ஆதி | பாட்டு. இலக்கம். | பக்கம். |
|---|---|---|
| எவளோ அவளே | ௱௯௩ | ௧௮௨ |
| எவ்வகையிலும் | ௩௮ | ௩௭ |
| எனக்குக்கட்டிய | ௪௨ | ௪௰ |
| எனை ஆதரிப்பாயே | ௩ | ௫ |
| எண்பிழைகள் | ௬ | ௮ |
| என்னசொன்னாலும் | ௱௧ | ௮௮ |
| என்னவந்தாலும் | ௧௮௪ | ௧௬௭ |
| என்னை நீ ஆளுவாய் | ௪௪ | ௪௨ |
| என்னை ஆளையா | ௧௨ | ௧௩ |
| ஏகநாதா | ௧௨௪ | ௱௫ |
| ஏகபராபரனே | ௫௯ | ௫௨ |
| ஏகாகனயோகா | ௧௨௨ | ௱௪ |
| ஏகாதிபரனே | ௬௭ | ௬௨ |
| ஏதுக்குவாங்கிறீர் | ௧௮௭ | ௧௭௰ |
| ஏதுபராமுகம் | ௭௬ | ௬௮ |
| ஏதோ இன்னம் | ௱௫ | ௯௧ |
| ஏதோசோதனை | ௭௫ | ௬௭ |
| ஏழைக்கிரங்க | ௪௫ | ௪௩ |
| ஏனின்னம் | ௪௭ | ௪௪ |
| ஐயனே உயர் | ௩௨ | ௩௩ |
| ஐயனே உன்னழகை | ௪௩ | ௪௧ |
| ஐயா எனை | ௧௪ | ௧௫ |
| ஒருவர்மேலும் | ௧௮௫ | ௧௬௮ |
| ஓ. ஓ. லோகநாதா | ௧௧௪ | ௯௭ |
| ஓ. ஓ. பிரபுத்துவமே | ௧௮௯ | ௧௭௩ |
| ஒகோகாலமே | ௧௭௫ | ௧௫௭ |
| ஒடிநான் உனை | ௨ | ௪ |
| கடைக்கண்ணால் | ௫௧ | ௪௮ |
| கருணாகடாக்ஷம் | ௫௬ | ௫௨ |
| கருணாகரப்பரம் | ௪௬ | ௪௪ |
| கருணாகரமூர்த்தி | ௮௧ | ௭௨ |
| கருணாசாகரா | ௬௯ | ௬௩ |
| கருணாலயநிதியே | ௧௨௮ | ௱௯ |
| கருணை நீசெய்ய | ௭௩ | ௬௬ |
| காக்கவேண்டும் | ௩௪ | ௩௪ |
| காக்ஷிஎனக்கு | ௯ | ௰௧ |
| காத்தருள்வாய் | ௭௧ | ௬௫ |

| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். |
| --- | --- | --- |
| கேளும்புமான்களே | ௨௱௩ | ௧௬௬ |
| ☞ கேள்மனமேநான் | ௧௯௫ | ௧௪௭ |
| சஞ்சலமாய் | ௮௫ | ௭௫ |
| சமயம்ஈதையா | ௧௧௭ | ௱ |
| சம்மதிஎனக்கு | ௩௧ | ௩௨ |
| சரணம்சரணம் | ௨௧ | ௨௩ |
| சரணம்சர்வேசா | ௭௮ | ௭௰ |
| சருவஜீவாதார | ௧௩௮ | ௱௰௯ |
| சருவவிநோதா | ௧௩௰ | ௱௰ |
| சருவேசாசரணம் | ௧௧௯ | ௬௬ |
| ஜாலம்செய்வதேதோ | ௪௰ | ௩௬ |
| சித்தம் இரங்கி | ௧௧ | ௧௨ |
| சித்தம்உவந்தருள் | ௪ | ௯ |
| சித்தம்எப்படியோ | ௮௨ | ௭௯ |
| சிந்தைக்குள் | ௨௰ | ௨௨ |
| சீச்சீநீர்லஞ்சம் | ௧௮௯ | ௧௯௬ |
| சீலம்நீதா | ௨௨ | ௨௪ |
| செய்யவேண்டுமோனல் | ௪௭௧ | ௧௫௩ |
| ஜெகநாதா | ௫௮ | ௫௪ |
| ஞானகுருபரவடிவே | ௱௬ | ௬௩ |
| ஞானமார்க்கம் | ௬௩ | ௮௬ |
| ஞானோதயவரம் | ௧௩௨ | ௱௰௧ |
| தஞ்சமநீயே | ௯௪ | ௫௬ |
| ததியிதென்முகம் | ௩௬ | ௩௮ |
| தயைபுரிய | ௭௰ | ௯௪ |
| தயைபுரியே | ௧௨௫ | ௱௯ |
| தருணங்கருணை | ௧௩ | ௧௪ |
| தருணமீதையா | ௬௭ | ௮௪ |
| தருணம்தருணம் | ௮௯ | ௭௯ |
| தேவநாயகனே | ௨௫ | ௨௯ |
| தேவனேஉனே | ௨௮ | ௨௬ |
| தேவாதிதேவபல | ௬௨ | ௮௰ |
| தேவாதிதேவனேஜீவனே | ௬௬ | ௮௯ |
| தேவாதிதேவனேதயை | ௧௭ | ௧௮ |
| தேவாதிதேவே | ௯௯ | ௯௧ |
| நம்பாதேவாழ்வை | ௧௫௬ | ௧௪௰ |
| நம்பினேனுனையே | ௬௮ | ௮௫ |

| கீர்த்தகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். |
|---|---|---|
| நல்லபெண்ணை | ௧௯௪ | ௧௮௩ |
| நல்லவரம் | ௧௨௬ | ௱௭ |
| நாதனே சயை | ௬௩ | ௫௮ |
| நாதா அடியேன் | ௱௨ | ௮௮ |
| நாதாகனவேதா | ௧௧௨ | ௯௬ |
| நாதாகிடையாதா | ௧௨௯ | ௱௯ |
| நாதாநிரந்தரவிநோதா | ௩௩ | ௩௩ |
| நாயகர்பக்ஷமடி | ௧௯௭ | ௧௯௰ |
| நாளே நல்லநாள் | ௱௪ | ௯௰ |
| நானே உனை | ௮௯ | ௭௮ |
| நானேபொதுநீதி | ௧௭௬ | ௧௫௮ |
| நிச்சயம்இதுதானே | ௬௮ | ௧௬௩ |
| நிதம்நிதம் | ௱ | ௮௭ |
| நித்தியானந்தத்தைநாடு | ௧௫௰ | ௧௨௮ |
| நித்தியானந்தமே | ௧௫௩ | ௧௩௧ |
| நிரந்தரனே | ௩௬ | ௩௫ |
| நினைப்பதெப்போது | ௪௮௨ | ௧௬௫ |
| நின்பதமேதுணை | ௫௩ | ௨௫ |
| நீமலைக்காதே | ௧௪௮ | ௧௨௬ |
| நீயேகதியெனக்குன் | ௯௫ | ௯௰ |
| நீயேசர்வசக்தன் | ௱௬ | ௯௨ |
| நீயேதுணைபரனே | ௧௧ | ௯௬ |
| நெஞ்சே இந்த | ௧௪௬ | ௧௨௪ |
| நெடுநாள்நம்பினேனையா | ௧௪௰ | ௧௧௮ |
| பஞ்சந்தீர் | ௧௪௧ | ௧௧௯ |
| பஞ்சவர்ணக்கிளி | ௧௯௫ | ௧௮௫ |
| பணமேஉன்னால் | ௧௬௨ | ௧௪௪ |
| பணமேஉன்னால் | ௧௯௩ | ௧௪௫ |
| பத்தினிபோல் | ௧௯௬ | ௧௮௯ |
| பரபிரமமே | ௱௯ | ௯௪ |
| பரனே அடியார் | ௨௯ | ௩௰ |
| பரனேபக்தர் | ௯௰ | ௫௫ |
| பாசத்தால் | ௫௨ | ௪௯ |
| பாதம்நம்பினேனே | ௱௰ | ௯௫ |
| பாழ்மனமேயுன்னை | ௧௪௭ | ௧௨௫ |
| பிழைக்ஷ அருள் | ௧௩௪ | ௧௧௨ |
| புண்ணியம்போல் | ௧௫௩ | ௧௩௨ |

| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். |
|---|---|---|
| புண்ணியம்போல் | ௧௫௪ | ௧௩௪ |
| புத்திஇதுமகளே | ௧௯௨ | ௧௮௰ |
| புத்தியாய்வாழ்வீர் | ௨௱௮ | ௨௱௭ |
| புரட்டெல்லாம் | ௧௭௨ | ௧௫௪ |
| பெண்ணாசையே | ௧௬௭ | ௧௪௬ |
| பொருளைவிரும்ப | ௧௫௫ | ௧௩௫ |
| போதந்தரஎன்ன | ௧௧௫ | ௯௮ |
| போதும்போதும் | ௧௭௬ | ௧௬௧ |
| போனதுபோகட்டும் | ௧௪௬ | ௧௨௭ |
| மங்களம்மங்களம் | ௨௱௬ | ௨௱௮ |
| மயங்கிறாய்மனமே | ௧௭௩ | ௧௫௫ |
| மறவாதேகருணம் | ௧௪௫ | ௧௨௩ |
| மனமேஉனக்கு | ௧௯௬ | ௧௪௮ |
| மனமேஉனக்குஏன் | ௧௫௭ | ௧௩௭ |
| மனமேநான் | ௧௫௧ | ௧௨௯ |
| மனமேநீசன் | ௧௪௨ | ௧௨௧ |
| மனமேநீமயங்குவ | ௧௭௪ | ௧௫௬ |
| மனமேநீமறவாதே | ௧௪௩ | ௧௨௧ |
| மாதரைநினையாதே | ௧௬௪ | ௧௪௬ |
| மாதேஎன்வார்த்தை | ௨௱௪ | ௨௱௧ |
| மார்க்கம்அல்லடிமானே | ௨௱௧ | ௧௯௫ |
| மார்க்கம்இதுமகனே | ௧௯௧ | ௧௭௮ |
| மெய்ஞ்ஞானம் | ௯௧ | ௭௯ |
| மெய்யிது | ௱௮ | ௯௪ |
| மைத்துனரேநாளும் | ௨௱௬ | ௨௱௩ |
| மைத்துனனே | ௨௱௫ | ௨௱௨ |
| வழியிதுஉய்வதற்காமே | ௧௬௬ | ௧௫௧ |
| வாவாஜகநாதா | ௭௨ | ௬௫ |
| வாவாவாவா | ௧௰௮ | ௱௧ |
| வாவாவாதேவே | ௯௬ | ௮௩ |
| வாழ்வைநம்பாதே | ௧௫௮ | ௧௩௯ |
| வித்தையைப்படியுங்கள் | ௨௱௨ | ௧௯௬ |
| வினையேஎனையே | ௭ | ௯ |
| வீண்கர்வமேன் | ௧௫௬ | ௧௩௬ |
| வேதநாயகனேஎவ்வித | ௪௧ | ௩௯ |
| வேதநாயகனேமெய் | ௧௧௩ | ௯௭ |
| வேதநாயகா | ௬௨ | ௫௭ |

சர்வசமயசமரசக் கீர்த்தனைகளிலுள்ள

# இராகங்களின் அகராதி.



| இராகம். | கீர்த்தனைகளின இலக்கம். |
|---|---|
| அசாவேரி | 5-52-170-18 -199 |
| அடாணு | 26-69-148 |
| அபூர்வம் | 130 |
| அமிர்கல்யாணி | 129 |
| அம்சதொனி | ı32 |
| ஆகிரி | 31-63 |
| ஆநந்தபைரவி | 36-37 |
| ஆரபி | 25 |
| இந்துஸ்தான்காப்பி | 1o2-118-119-15o-153-158-16o 165-206 |
| ஈசமநோகரி | 74-1o8 |
| உசேனி | 23-97-124-141-194 |
| எதுகுலகாம்போதி | 56-61-164-148 |
| கண்டா | 96 |
| கமாஸ் | 40 55-77-138-161-164 |
| கரகரப்பிரியை | 54-208 |
| கல்யாணி | 13-19-84-144-200 |
| கற்கடா | 22 |
| கனகவசந்தம் | 111-155-159 |
| கன்னடகௌளம் | 58 |
| காப்பி | 1o4 |
| காம்போதி | 4-29-38-42-57-174-2o1 |
| குந்தளவராளி | 1oo-142 |
| கெங்காதரங்கணி | 8o |
| கேதாரகௌளம் | 3-2o-35-154 |
| கேதாரம் | 28 32 |
| கௌளிபந்து | 114-116-166 |
| சங்கராபரணம் | 6o-162-168-187 |
| சஹானு | 74-83-90-94-145-192 |
| சரசாங்கி | 131 |
| சாமந்தா | 91 |
| சாமா | 41-88-101-1o9 |
| சாரங்கா | 49-198 |
| சாவேரி | 105-176-198 |
| சாளங்கபைரவி | 95 |
| சுத்தசாவேரி | 86-89 |
| சுப்பிரதீபம் | 7 |
| சுருட்டி | 17-120-149 |
| செஞ்சுருட்டி | 39-43 |
| சைந்தவி | 45 |

| இராகம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|
| சௌராஷ்டிரம் | 135 167-177-180-186-195-19[illegible] |
| ஜங்கலா | 126 |
| ஜயந்தஸ்ரீ | 33 |
| ஸ்ரீராகம | 62 |
| தர்பார் | 12·175 |
| தன்னியாசி | 46-68-157-169-171-189 |
| தீனசங்கராபரணம் | 133 |
| துசாவந்தி | 2-27 |
| தேசமுகாரி | 115 |
| தேசிகம் | 209 |
| தேசிகதோடி | 14-137 |
| தேவகாந்தாரி | 1 |
| தேவமனோகரி | 87-156 |
| தோடி | 70 72-76-107-139-151-16320 |
| நாகத்தொனி | 99 |
| நாதநாபக்கிரியை | 10-15-50-113-117-178-18220 |
| நீலாம்புரி | 67 |
| பங்களா | 85 |
| பந்து | 106 |
| பந்துவராளி | 51·172 |
| இபர | 8-58-65-82-92-205 |
| பலஹம்சா | 93 |
| பியாகடை | 30-75-188 |
| பியாகு | 18-64-103-110-134-147-190 |
| பிலஹரி | 128-197 |
| புன்னாகவராளி | 34-125-179-204 |
| பூபாளம் | 66 |
| பூரணகொலை | 6 |
| பூரணச்சந்திரிகை | 127 |
| பூரிகல்யாணி | 81-98 |
| பைரவி | 16·112-122-140-185 |
| மத்தியமாவதி | 48-59 |
| மணிரங்கு | 11 |
| மனோகரம் | 136 |
| மாஞ்சி | 44 |
| முகாரி | 24-71-184 |
| மோகனம் | 9-47-121-123-183-191-203 |
| யமுனாகல்யாணி | 21-152 |
| ரீதிகௌளை | 78 |
| லலிதா | 79 |
| வசந்தா | 173 |

உ

கடவுள் துணை.

# சர்வசமய சமாச ஸ்தோத்திரம்.

☞ பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்கொண் டிலங்கிடும் சிருட்டிதிதி சம்மாரஞ்
செய்ய முக்குண வஸ்துவாய்
செப்பரிய சகுணமாய் நிர்க்குணத் தாகார
தீண்டிடா ஞானவொளியாய்
பார்கொண் டிலங்கிடும் யாவையுந் தந்தாளும்
பரனைப் பரஞ்சுடருமாய்
பக்தரி னுளத்தினி லாடுந்தெய்வி கனைப்
பாவமெனுந் திமிரமோட
பேர்கொண் டிலங்கிடும் தாரகம தாய்வேதம்
பேசரிய கலையாகியே
பெட்புநிறை யானந்த முச்சுடரு மாய்நின்ற
பெருமை நிறை யாவும் வல்ல
வார்கொண் டிலங்கிடும் தாதாவுமாகிய
வள்ளலே கருணை தரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் நிந்தையகல
மாசிலா ஜகதீசனே. (1)

எங்கும் நிராதார நிர்க்குண நிராலம்ப
ஏகாந்த காருண்ணிய
மென்றுந் துலங்கிட மனோதீத மதினினந்
தெழிலாரும் பரமகுருவாய்
தங்கமெனு மெய்ஞ்ஞான தீபமாயடியவர்
துகளனைத்துந் தீர்த்தரு
ய்யமைசை தங்கநாய் திருமறைக ளோதிதொழும்
சுத்தசின் மயவடிவமாய்
புங்கவர்க ளென்றுந்துதி செய்திடுங்காரணப்
பூரணப் பொருளுமாகி
போதங்க ளியாவுக்கு முதன்மையாய் நின்றெழுகும்
புண்ணியவாழ் வதனையென்றும்
மங்களாகரமாக வருள் மனோதீதனே
வள்ளலே கருணை தரவே

வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் நிந்தையகல
மாசிலா ஜகதீசனே.

பூதலமெலாம்பரவு நாத நாதாந்தனே
பொற்பிலகு மானந்தனே
புகழ்தங்கும் ஞானகா ருண்ணியனே தொண்டரின்
புரையனைத்தையுந் தீர்த்திடும்
வேதனே வேதாந்த சமரசக்கியானியர்கள்
விரும்பியே துதிபராவும்
விமலனே அமலனே வித்தக நிராலம்ப
விபுதனே சுகுணமணியும்
போதனே பூசுரர்க ளுளமதனிலே நீடும்
பூரண னந்தவாழ்வே
போக்குவர வில்லாத புண்ய கருணும்பரா
பொய்யிலா ருண்மை வடிவே
வாதனையு மும்மலச் சேட்டையுமொழித்திட
வள்ளலே கருணைதரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் நிந்தையகல
மாசிலா ஜகதீசனே.

அண்டர்கள் பணிசெய்யு மாதிமத்யாந்தகா
அற்புதா கரசீலனே
அவனியுட னதிலுள தியாவையு மமைத்தருளும்
ஆனந்த மறைமூலனே
பண்டைவினை யாவையும் தீர்த்தாண்டு கருணைதரும்
பரனே நிரந்த்ரவடிவே
பகரறிய சுகுணமே பதமருளும் நம்பனே
பக்ஷமது வைத்தருள் செய்வாய்
எண்டிசையும் துதிமலியும் ஏகமேபோகனே
எதிலார்க்கருள் தியாகனே
எப்பாருமுனதளியி லாமல்திக ழாதெனவே
என்னுளம் நினைந்துருகலால்
மண்டல மெலாம்புகழ சமரசக்கீர்த்தனை
வழுத்தினேன் கருணைதரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள்நிந்தையகல
மாசிலா ஜகதீசனே.

---

கடவுள் துணை.

# சர்வசமய சமாசக் கீர்த்தனைகள்.

## 1. இராகம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்.

பல்லவி.

எக்காலமும் உந்தன் பொற்கால்பணிந்துகொண்
டிருக்கவரம் அருள்வாய். (எக்கா)

அநுபல்லவி.

தக்கோர் அபிமான ஞானசீலா
சகலபுவனரக்ஷ காநுகூலா. (எக்கா)

சரணங்கள்.

சந்தமேவுபிர பந்தமாலைபாடி
கந்தமார்உன் அர விந்தபாதம்சூடி
வந்தனைகள் அநந்தமேசொலி
விழுந்துபூமியில் எழுந்துநைந்துருகி. (எக்கா)

துங்கசாதுஜன சங்கமோடுகூடி
பொங்கும்ஞான அகலங்கவாரிஆடி
அங்கமேபரவ சங்கொளப்பலப
தங்களோடுசுப மங்களங்கள்சொலி. (எக்கா)

பழுதிலாது தினம் முழுதும்உன்னைநாடி
தொழுதுநேசமுடன் அழுதுபாடிஆடி
ஒழுகுசெந்தழலின் மெழுகுபோல்மனம்
இளகியேஅதிக புளகிதாங்கமுடன். (எக்கா)

பூதலம்பரவு பாதவேதநாதா
சாதகம்செயும் அபேதநீததாதா
போதநாயகனே பூதநாயகனே
கீதநாயகனே வேதநாயகனே. (எக்கா)

2. இராகம்-ஜுசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

ஓடிநான்உன்னைத் தேடிவந்தேன்-எனக்
குதவிசெய்தருள் ஐயனே.

அநுபல்லவி.

நாடிஉன்பதம் தொட்டேன்
கோடிதரம் கும்பிட்டேன்
நாதவிநோத பிரசாதபிரபோல
அபேதஅதீத நிர்வாதபோதனே.

சரணங்கள்.

1. அற்பமானபதார்த்தம் - சற்றும்விரும்பேன்
ஐயா இது பதார்த்தம்
அற்புதபரமார்த்தம் - கொடுத்தருளில்
அதுவேஉப யோகார்த்தம்
பற்பல விசித்திரனே
கற்பனு சமுத்திரனே
பாச விநாச சுரேச நரேச
பிரகாச விகாச உலாச விலாசனே.

2. வந்தனைபேஅடுத்தேன் - கீர்த்தனமாலை
வகைவகை நான்தொடுத்தேன்
வந்தனம்கைஎடுத்தேன் - நீவசிக்கநான்
மனக்கோயிலுங் கொடுத்தேன்
அந்தமினை உனக்கே
உந்தன் மனைஎனக்கே
ஆய விதேயர்கள் நேய சகாய
அகாய உபாய நியாய விதாயனே.

3. அன்பர்உபாசனனே - பூதலந்தன்னில்
அதர்ம விமோசனனே
இன்பநிவேசனனே - வேதநாயகன்
இதய சிம்மாசனனே
என்பவங்களைத் தீர்ப்பாய்
உன்பதந் தன்னிற்சேர்ப்பாய்
ஏக அநேக திரிலோக நிர்வாக
தெய்விக விவேக அமோக தியாகனே.

## 3. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

எனை ஆதரிப்பாயே - என்மன இருள்
தனையேபிரிப்பாயே. (எனை)

அநுபல்லவி.

வினையே அரிக்கும்சொல்வா
வீணன் ஒருபுல்லா
நினையா என மனங்கல்லா
நிதம் அதனுடன்மல்லா

நிசயபிர போதனே
அக்ஷயப் பிரக்கியாதனே
சஜ்ஜனப் பிரசாதனே
துர்ஜ்ஜனப் பிரமாதனே. (எனை)

சரணங்கள்.

1. துக்கப்பிர பஞ்சத்தொல்லை
சொல்வதற் குண்டோஎல்லை
திக்குவே றெனக்கில்லை
தெய்வமேகேள் என்சொல்லை

சிஷ்டர் சமுதாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுண நேயனே. (எனை)

2. அடியனன் வினைவசம்
ஆயினன் இதுநிசம்
படியிற் கருணைசரம்
பாலித் தருள்கலசம்

பக்தஜன நேசனே
சுத்தமன வாசனே
சித்தமல நாசனே
வித்தக விலாசனே. (எனை)

3. மருவிய பாசவலை
மாட்டி உற்றேன் கவலை
தரும சைதன்னியநிலை
தந்தென் மயக்கந்தொலை

சங்கட நிவாரகா
எங்கள்குல தாரகா
பொங்குசுக தாயகா
துங்கவேத நாயகா. (எனை)



4. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

சித்தம்உவந்தருள்செய்ய - இத்தனைதாமதமேது
சீலனேபுவனபரி - பாலனேமூலனேநீயுன் (சித்தம்)

அநுபல்லவி.

நித்தனேபுவியெங்கும்-பிரசித்தனேநிகிலலோக
கத்தனேஜீவகோடிகட்-கத்தனேசுத்தனேநீயுன் (சித்தம்)

சரணங்கள்.

1. அசடனெனென்பதென்ன ரகசியமா - பெற்ற
அன்னையிடப்உண்மை சொல்லவேபயமா
வசஞ்செய்தருள்வ துனக்கோர்விஷயமா-யாவும்
வல்லஉனக்கிதென்ன அதிசயமா

வசனசாதுரியனே
மனனமாதுரியனே
சுஜனர்கள்பிரியனே
சுரர்தொழும்பெரியனே. (சித்தம்)

2. நிதமும்உனதுபத கைங்கரியமே-செய்ய
நீயருளெனக்குச் சுதந்திரியமே
அதுவேயெனக்குப்பெருஞ் சௌகரியமே-இனி
ஐயனேவேண்டேன் வேறுஐசுவரியமே

அதிசய அப்பிரமேயா
அகணித சுப்பிரகாயா
விதிநெறி செப்பும்வாயா
விநய சங்கற்பதூயா. (சித்தம்)

3. பூதபௌதிகமெல்லாம் நிறைவோனே-நல்ல
புண்ணியத்திருமறையை அறைவோனே
வேதநாயகன்மனம் உறைவோனே-ஞான
விழியில்லாதவருக்கு மறைவோனே

போதகப்பிர காசனே
புண்ணியப் பிரதேசனே
சாதகக்கிரு பேசனே
தாசருட் பிரவேசனே. (சித்தம்)

---

5. இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்திற்சொல்லுவேன்.

ஓ-ஓ-ஜகதீசா.

அநுபல்லவி.

பொன்னிடத்தாசையறு புனிதர்கள்தமக்கின்பம்
பொழிதருவே இந்தப் புவியில்நான்படுந்துன்பம். (உன்னி)

சரணங்கள்.

1. வயிறுபசிக்கும்பிள்ளை மாதா இடம்போமன்றி
மற்றொருவரிடத்திற் சேருமோ-நாளும்
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினாலே அதுதீருமோ-கன.

வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்நீரே
உயிர்ப்பயி ரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே.

உலைவுறுசல்லடை போற்பல ஓட்டை
உளதாகியவெறும் புழுமலக் கூட்டை
நிலையெனமனக்கவி செயும்பல சேட்டை
நித்தியம்நான் அதனாற்படும் பாட்டை. (உன்னி)

2. நாதனேநான்பிழை யாதுசெய்யினும்நின்னை
நம்பினேன் என்மேலின்னம் க்ஷாத்திரமா-பாரில்
ஓதரும்புலச்சத்தி ராதியர்கையில் என்னை
ஒப்புவிக்குதல்தர்ம சாஸ்திரமா-மறு.

மாதர்மேற் செல்லும்நேத்திரம்
வாயே அபத்த பாத்திரம்
தீதுரைகொள்ளுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம் வேண்டுங்காத்திரம்.

தீய அவயவங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசாபாசம்
நாயேன்செய்கைகளோ ஆபாசம்
நான்குபக்கத்திலும் நான்படுங்கிலேசம். (உன்னி)

3. எத்தனை சுவைபாவம் வேண்டுமானாலுமுந்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமே-என்தன்
அத்தனேநானுன்சேயென் றறிந்தும்நோய் செய்யுமாவைக்
கார்தந்தார் இந்த அதிகாரமே-சர்வ.

உத்தமஞ்சேர் நிர்தோஷ
உன்னதமா விசேஷ
பத்தர்நித்திய சந்தோஷ
பரசமயத்து வேஷ.

பாக்கியமலர்ந்தருள் பழுக்கும் உத்தியான
பலபுவனத்மகோடிகள் அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அனைதந்தைகுருதெய்வஞ் சகலமுமான. (உன்னி)

---

6. இராகம்-பூரணகௌளை-ஏகதாளம்.

பல்லவி.

என்பிழைகள் பொருத்தருள்வாய் - எனை அலைக்கும்
துன்பவினை அறுத்தருள்வாய்.

அநுபல்லவி.

முன்பரவியே ஜெபிக்கும்
அன்பர்கள் அனுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பதகமலம் நம்பும். (என்)

சரணங்கள்.

1. நேயனைப்போல்விவகரிப்பேன்-துதிகவிகள்
ஆயிரம் உண்டாக்கிவிரிப்பேன்-என்செய்கையெல்லாம்
வாயின் அன்பலாதுமனந்-தோயும் அன்புளதோசிறு
நாயின் அன்புமேயிலாமல்-நீயவம்பனுய்த்திரியும். (என்)

எண்ணவொண்ணுமோ என்பவமே-ஐயனே இந்த
மண்ணினில் என்ஜன்மம் அவமே-தினந்தினமும்
உண்ணலும்நித்திரைதனை-நண்ணலும்பெரும்பவங்கள்
பண்ணலும்அல்லாதுன்பதம்-எண்ணல்செய்தறியேன்ஸ்வாமி.

போதகம் என்னிடமில்லயமே-என்மனம்பஞ்ச
பாதகங்கட்காலயமே-புவனமிசை
மாதவம்புரிபவர்க்குக்-கோதகலும் இகபர
சாதகங்கொடுத்தருளும்-வேதநாயகா இறங்கி. (என்)

---

7. இராகம்-சுப்பிரதீபம்-திரிபுடை.

பல்லவி.

வினையே எனையே மேவாதருளே.

அநுபல்லவி.

நினையேநம்பினே னின்மயப்பொருளே. (வினை)

சரணங்கள்.

கனவிலுந்தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும்உன தருள்குறியேனே. (வினை)
பாவமென்பதற்கொரு பதியானேனே
ஜீவனும்வழிதெரி யாமற்போனேனே. (வினை)
உதரபோஷணையன்றி உனைநினையேனே
இதயந்தனில் உன்னடி இணைபுனையேனே. (வினை)
பூதலந்தொழும் அதி புண்ணியர்மித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபத்திரனே. (வினை)

---

8. இராகம்-பரசு-ரூபகம்.

பல்லவி.

ஆண்டருளே-கருணை-பூண்டருளே.

அநுபல்லவி.

தூண்டருஞ் சுடராக விளங்கும்
சோதியே-உயர்-நீதியே எனை. (ஆண்ட)

சரணங்கள்.

1. என்னை ஆ ள்வது பாரமா என
இடம்வர வெகு தூரமா
அன்னைக்கும் உப சாரமா எனக்
கருள்புரிய இக் கேரமா கன

ஆரியனே - மெய்ஞ்ஞான
சூரியனே - சர்வலோக
காரியனே - மிகுந்தஔ
தாரியனே - ஜகந்தனில்.

உன்லயல்லது பின்னையார்துணை
யோகனே-சுக-போகனே-என்னை. (ஆண்ட

2. எனதுடலெனும் புல்லையே காக்க
எவர்க்குங் காட்டுவன் பல்லையே
தினமும் ஆயிரந் தொல்லையே இதில்
சிறிது மேசுகம் இல்லையே கன

சேதனனே - பெரியபு
ராதனனே - பரவநி
கேதனனே - மெய்ஞ்ஞான
சாதனனே - அநுதினம்

நினது பாதம் நம்பினேன் அதி
நேசனே-பிர-காசனே-என்னை. (ஆண்ட

3. பொறுமை உனக்குச் சொந்தமே ாஸ்
புரியும்பிழை அநந்தமே
மறுமையுறு நிர்ப்பந்தமே கெட
மலர் பாதார விந்தமே கன

மாயனே - அமரர்கள்
காயனே - சர்வாண்ட
சாயனே - தனி அர
சாக்ஷியனே - தினந்தினம்

றுவன் வேதநாயகன் பணி
கீர்த்தியே - அ - மூர்த்தியே - என்னை. (ஆண்ட

9 இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

காக்ஷிஎனக்குக் கொடாமலிருக்கின்ற
காரணம் ஏதையா. (காக்ஷி)

அநுபல்லவி.

சாக்ஷியாய்நிற்கும் சருவாதிகாரனே
யாக்ஷியுடையோர்மகிழ் நிர்விகாரனே. (காக்ஷி)

சரணங்கள்.

1. அந்தரங்கபக்தி அற்றவனென்றோ
அக்கிரமத்திற்பெயர் பெற்றவனென்றோ
பந்தப்பேய்க்குள்ளத்தை விற்றவனென்றோ
பாதகங்களெல்லாங் கற்றவனென்றோ. (காக்ஷி)

2. மறந்தும்ஒருமெய்சொல் லாதவனென்றோ
மருந்துக்குநன்மைஇல் லாதவனென்றோ
சிறந்தமெய்ஞ்ஞானங்கல் லாதவனென்றோ
தேசத்தார்க்கெல்லாம்பொல் லாதவனென்றோ. (காக்ஷி)

3. ஏசிமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசர்க்குள்மெத்தச் சிறந்தவனென்றோ. (காக்ஷி)

4. ஆதிமத்தியாந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதிஉபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா. (காக்ஷி)

---

10. இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

அருள்புரிவாயே - எனதுள
மருள்தெரிவாயே.

அநுபல்லவி.

இருளை நிகரும் சுருள் கொள்ஒதியர்
இலகும்பொருள்-உலகபுரி-கலகம்படர்-விலகும்படி. (அருள்)

சரணங்கள்.

1. நினைவெல்லாம் உன்நினைவதாயென் நெஞ்சம்உன்றதோ-பழி
புனையும்வாய்வெறும் பேச்சைவிட்டுனைப்புகழ்ந்துபன்றதோ
தினையளவு மெய்தனைவிடாது [சிறு
சிந்தித்துனை-வந்தித்திடு-புந்தித்திடம்-வந்துத்திட. (அருள்)

2. எத்திசையும் உன்னுருவமாகவே இலகக்காணேனே-சொந்த
அத்தம்யாவும்நீயென்றேமிக ஆசைபூணேனே-கன
மத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம்-நாடித்தவம்-நீடிக்கதி கூடிக்கொள. (அருள்)

3. நீதமாயரும் போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே-நாளும்
வேதநாயகன்காதல்மனப்பெண் மேவும்பர்த்தாவே-கொண்ட
ஏதமறப்பிர சாதம்உதவி
இழிவண்டிய-பழிவிண்டுநல்-வழிகொண்டுனை-விழிகண்டிட.

---

11. இராகம்-மணிரங்கு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்இரங்கிநல் முத்தர்தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக் காத்தருளே.

அநுபல்லவி.

உத்தமசீலர்தஞ் சித்தமலர்உறை
வோனே-கோனே-வானே-தேனே. (சித்த)

சரணங்கள்.

1. நின்னடித்தொண்டனென்ன அறியும்
நிதம் உலகந்தானே
என்னஉன்தொண்டின் பலனென்றெனைப்புவி
ஏசில்என் சொல்வேனே
பன்னரும் உன்னருள் என்னருகாக்கிடப்
பண்ணே-கண்ணே-எண்ணே-விண்ணே. (சித்த)

2. பொய்த்தெய்வந்தங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவர்தம்முனமே
மெய்த்தெய்வம்உன்னைத் தொழும்எனக்கென்ன
விசேஷப் பிரயோஜனமே
கைத்தொழில்அண்டம் அனைத்துந்தாங்கிடு
கையா-துய்யா-மெய்யா-ஐயா. (சித்த)

3. கழுவக்கழுவ அழுக்குடல்மீது
கலந்தடருந்தன்மையே
தழுவி என்னெஞ்சுறு மாசுகள்நீங்கிடத்
தந்தருள்வாய் நன்மையே
எழுமன்போடுவேத நாயகன்போற்றிடும்
ஏகா-யோகா-வாகா-தியாகா. (சித்த)



12. இராகம்-தர்பார்-திரிபுடை-தாளம்.

பல்லவி.

என்னை ஆளையா-என்விண்ணப்பம்
தன்னைக்-கேளையா.

அநுபல்லவி.

மின்னைநிகரும்வாழ்வை வெறுப்பவர்க்குரியோனே
அன்னைபிதாசற்குரு வாகியபெரியோனே. (என்னை)

சரணங்கள்.

1. அடியன்மேற்சினமா - என்குறை நீக்கி
ஆள்வதுகனமா
கடினம்நின்மனமா - எனதுநெஞ்சம்
கவலைக்காசனமா
படியில் என்னகத்துறு பாவ இருளைமாற்றித்
திடமுறவேமெய்ஞ்ஞான தீபமதனையேற்றி. (என்னை)

2. என்றுஞ்சஞ்சலமா - ஐயனேமாயைக்
கிவளவுபலமா
வென்றுகொள்புலமா - அதனால் ஏழை
மெலிவதுநலமா
நன்றுருவாகியநாதா என்முகம்நோக்கிக்
குன்றெனநான்செயுங் கொடுவினைகளைப்போக்கி (என்)

3. கைவிடலாமா - என்னிடம்வரக்
கால்மலர்நோமா
தீவினைபோமா - இனிமைதங்கும்
நன்னயநாமா
தெய்வநாசகனுகித் திகழுறும் அகளங்கா
கைவல்லியஞானநெறி கமழ்மதுரப்பிரசங்கா. (என்னை)

1\. திக்திக்குத்தேனே - அமுதேகன
தேவர்கள்கோனே
எத்திக்குந்தானே - எள்ளுமெண்ணெய்போல்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகழ்மாலை அணிவோனே
பத்தியுடனேவேத நாயகன்பணிவோனே. (என்னை)

---

13\. இராகம்-கல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

தருணங்கருணைபுரிகுவாய்-ஐயா-உனக்கனந்தங்கோடி
சரணஞ்சரணந்-தெரிகுவாய்மெய்யா.

அநுபல்லவி.

அருணகோடி தேஜோமயனே பொன்
திரணமென்றுண்ணுவோர்பபனே இத். (தருணங்)

சரணங்கள்.

1\. இந்திரியசத்துருக்கள் செய்மோசம்
என்னசெய்வேனிர்வகித்தல் பிரயாசம்
நிந்தனையான அநு பந்தபாசம்
நீங்கச்செய்வாய்புண்ணிய உபதேசம்
நீயேகதியென்றே ஒரு
தாயேதுயர்ஒன்றே சிறு
நாயேன்கெடல்நன்றே கண
தீயன்உடல்குன்றே இது (தருணங்)

2\. கோரமாய்த்தன்பிள்ளைசெய்யினுந் தீது
கோபித்துநீக்கிடுந்தாயுண்டோ ஓது
காரமாநான்செயும்பாவம்பொ றுது
கைவிடில்வேறெனக்காதர வேது
காயத்தைஎடுத்தேன் அரு
மாயத்தைஅடுத்தேன் அனி
யாயத்தைஉடுத்தேன் திரு
நேயத்தைவிடுத்தேன் இது (தருணங்)

3\. நச்சுமரத்தையும்வைத்தவன் தானே
நாள்தோறுங்காவல்செய்யாமல்இ ரானே
இச்சகமீதில்எனைஅமைத் தோனே
என்னைநீஆளாவிடிற்பிழை யேனே

ஏகந்தழையுருவே — சுக
போகந்தழைதருவே — கன
யோகந்தழைதிருவே — முதிற்
பாகந்தழைதருவே — இது (தருணங்)

4. நிதமும்நானும்பாதகச் — சேறு
நீக்கிடப்போதுமோநின்னருள் — ஆறு
விதியுங்கதியும்இல்லையே — வேறு
வேதநாயகனேஅருள் — பேறு

வேதத்துருவோனே — பல
பூதப்பெருமானே — கன
போதத்தமர்கோனே — இரு
பாதத்தைவிடேனே — இது (தருணங்)



14. இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாஎனை ஆண்டருளே - உனை
அண்டினனே-மனம்-வெண்டினனே. (ஐயா)

அநுபல்லவி.

பொய்யாம்வாழ்வினில்நான்குழையாமல்
போகாதிகளில்என்மனம் நுழையாமல். (ஐயா)

சரணங்கள்.

1. ஒருநிமிஷமுமுனதடிமறவாமல்
உலகழியினுமுனதருள் துறவாமல்
இருதயமதனிலோரிடர்பிறவாமல்
இழிவுறுபழியொடுநோணிறவாமல். (ஐயா)

2. உன்னையலாதொருவரையும்தொழாமல்
உதரநிமித்தம்எங்கும்ஓடியழாமல்
இந்நிலமீதுதுராசைஎழாமல்
இறந்துபின்னனெரிநரகில்விழாமல். (ஐயா)

3. நல்வழிதனைஎந்தநாளும்விடாமல்
நாட்டில்அசடனெனநான்பேரெடாமல்
பல்வகையாகியபழிகள்தொடாமல்
பாவையர்மோகத்தில்படிந்துகெடாமல். (ஐயா)

4. என்னுயிர்போல எவ்வுயிரையும்பேண
இகசுகபோகத்தை என்றுமேநாண
மின்னுங்குணபா ணங்களைப்பூண
வேதநாயகனே நானுனைக்காண. (ஐயா)



15. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் - ஸ்வாமி - இந்த.

அநுபல்லவி.

பந்தவினையெலாம் அறவேண்டும் - உன்
பாததரிசனம் பெறவேண்டும். (இந்த)

சரணங்கள்.

1. தினமும்உன்பதமலர் தொழவேண்டும்-நான்
தேகபரவசமா யெழவேண்டும்
அனல்மெழுகாயுருகி யழவேண்டும்-இனி
ஆனந்தக்கடலில்நான் விழவேண்டும் (இந்த)
2. தேகவிஷயாதிகள் கெடவேண்டும்ஞான
தீபத்தைஎன்னுளத்தில் இடவேண்டும்
பாகஅறப்பயிரை நடவேண்டும்-அந்தப்
பயிர்க்குன் அருட்புனலை விடவேண்டும்.(இந்த)
3. மோகப்பசாசுதனை வெலவேண்டும்-நல்ல
முத்திநெறியிலே செலவேண்டும்
நாகமெனும்புலனைக் கொலவேண்டும்-வேத
நாயகனேயுன்னாமஞ் சொலவேண்டும்.(இந்த)



16. இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தப்பிழைகளெல்லாம் பொறுப்பாயே - பாச
பந்தக்களைகளை வேரறுப்பாயே. (இந்த)

அனுபல்லவி.

சொந்தப்பிள்ளைகளான தூயவர்க்குப்பிதாவே
அந்தப்பரமசுகம் அளிக்குங்கனதாதாவே. (இந்த)

சரணங்கள்.

1. ஆதியான பரஞ்சோதி உன்னைநான்வெறுத்தேன்
என்மனந்தனை
ஆகமாதிகள்சொல் யோகசாதனையில்நிறுத்தேன்
அநுதினமும்
வேதவேதியர்கள்ஓது நீதியையுமறுத்தேன்
சமர்த்தன்போலே
வீம்புபேசிப்பெரும்பாம்பு போலவிடம்பொறுத்தேன்
சதாகாலமும்

பூதலவாழ்வுதனைநாடினேன் மறு
மாதர்கள்சுகந்தனைத்தேடினேன் பஞ்ச
பாதகரோடுஉறவாடினேன் கன
காதகனென்றுபெயர் சூடினேன்

ஆதுலர்க்கமுதியாமலேதடுத்தேன்
சாதுஜனங்களைக்கண்டேதடிஎடுத்தேன். (இந்த)

2. நேயமானதந்தைதாயைச்சற்குருவைப்பழித்தேன்
ஜெபதபத்தை
நித்தியகர்மங்களைப்பத்திமார்க்கங்களைஒழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமேசுகமாயவாழ்விற் செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில்வாழ்மிருகக்கூட்டம்போலநாள்கழித்தேன்
அநுதினமும்

தூயரைக்குறைசொல்லித் தூற்றினேன் பெருந்
தீயரைத்தினந்தினம் போற்றினேன் நல்ல
ஞாயவழக்குகளை மாற்றினேன் பதி
னாயிரம்பொய்சொல்லத் தேற்றினேன்

வாயில்வந்தபடிவம்புகள் தொடுத்தேன்
கோயில்மணியமெனக்குடிகளைக்கெடுத்தேன். (இந்த)

3. பூவிலேபாவியென்றுபேரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும்வஞ்சனையுஞ்செய்யுமார்க்கந்தனையடுத்தேன்
உன்னுமந்தனை
நாவிலேஎனதுபாவிலேசொலாமல்விடுத்தேன்
ஞானியைப்போல
நாட்டில்மாயவேஷங்காட்டி என்னைநான்கெடுத்தேன்
அநுதினமும்

பாவமும்பழிகளுந்தாங்கினேன் பெருங்
கோவமுங்குரோதமும்ஓங்கினேன் புண்ணிய
ஜீவனஞ்செய்யாமல்தூங்கினேன் நல்ல
பாவனஞ்செய்யும்வழிநீங்கினேன்

ஆவலாகப்பலர்பொருள்அபகரித்தேன்
காவலாநெறியைக்கடந்துசஞ்சரித்தேன். (இந்த)

4. வாரங்கூலிகளிற்சோரஞ்செய்துநான்குறைத்தேன்
பிறரிடத்தில்
வாங்கியபொருள்களைஈங்கிலையென்றுநான்மறைத்தேன்
பஞ்சத்திலேவியா
பாரஞ்செய்யப்பலசேரில்நெல்லைக்கட்டிநிறைத்தேன்
நல்லதண்ணீரைப்
பாழிலேசகலநாழிகையும் விழலுக்கிறைத்தேன்
முதலினொடு

நேரவட்டிதனைக்கூட்டினேன் வெகு
தூரம்அசுவிலையைநீட்டினேன் வழக்
கோரஞ்சொல்லிச்சண்டைமூட்டினேன் உப
காரஞ்செய்தோர்க்குக்கத்திதீட்டினேன்

தாரம்பிள்ளைகளுக்குந்தான்செய்தேன்வஞ்சம்
நேரில்வேதநாயகாநின்னடிதஞ்சம். (இந்த)



17-இராகம்-சுருட்டி-திசிரஜாதி-ரூபகம்.

பல்லவி.

தேவாதிதேவனே-தயை-தயை-செய்தருள்வாயே.

அநுபல்லவி.

பாவஉடலம்எடுத்துநீளும்
பாதகனும்என்னைநாளும்
பந்தப்பகைசாடாமல்
சிந்தைத்துயர்கூடாமல்
நிந்தைப்பழிமூடாமல்
இந்தப்படிவாடாமல். (தேவாதி)

சரணங்கள்.

1. கற்பகோடிகாலம்போலஅற்பவாழ்வினை மதித்தேன்
காரமாகளங்கோபமும் அலங்காரமும்நெஞ்சினிற் பதித்தேன்
தற்பராஉன்பொற்பாதாம்புயந்தாழ்ந்திடா தனைத்துதித்தேன்
சாந்தமாம்யோகாந்தமார்க்கஞ்சார்ந்திடாமற்த குதித்தேன்

நற்பதந்தனைநாளும் சார்ந்து
நாசவினைகள்யாவுந் தீர்ந்து
ஞானந்தனிலே நீட
மோனந்தனையே நாட
வானந்தனையே தேட
ஆனந்தமே கூட (தேவாதி)

2. பாசமாம்பிசாசம்என்மனம்வாசஞ்செய்வது நிலையே
பாபமுங்கடுங்கோபமும்பலர்சாபமும்பெரு மலையே
நேசமும்விசுவாசமும்பிரகாசமும்எனக் கிலையே
சிந்தையான அகந்தைமூடும்என்சிந்தையுங்கடுஞ் சிலையே

ஈசனேஎன்பாவம் நீக்கி
என்னையேஉன்தாச னாக்கி
இன்பக்கடலே தேரத்
துன்பக்கடலே பேர
அன்பர்க்கினமே சார
என்பொய்க்குணமே தீர (தேவாதி)

3. அன்பர்களிக்கஇன்பம்அளிக்கும்ஆனந்தப்பெரும் நதியே
அனவரதமுங்கனவிரதர்கள் அகத்தில்ஒளிரு மதியே
துன்பசாகரம்என்பதுகெடத்தோன்றிடும்பர கதியே
தொண்டன்வேதநாயகன்மணப்பெண்டகமகிழ் பதியே

நின்பதந்தன்னைநாளும் ஏத்தி
நேசமாய்க்கவிமாலை சாத்தி
நீதிப்பயனே விள்ள
ஆதிப்பழியே தள்ள
வேதப்பயனே கொள்ள
போதக்கனிலே துள்ள (தேவாதி)



18-இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தநிமிஷமேபாபநிவர்த்தி
எனக்கருள்வாய்சுவாமி.

அநுபல்லவி.

எந்தநிமிஷத்தில்சாவுவருமோவென்
றேங்கியேநான் பயந்தேனேஉயிர்
நீங்கிடிலென்னசெய்வேனே-சுரர்கோனே.

சரணங்கள்.

1. காலைபோமாலையோநாளையோசாவெனுங்
காலங்கணக்கறியேனே வந்த
வேலைமுடியுமுன் ஓலையனுப்பிட
வேண்டாஞ்சொன்னேன்சிறியேனேஎன்னை
ஆண்டாலுனைப்பிரியேனே பெரியோனே (இந்த)

2. பொட்டென்றுதேகந்தான்சட்டென்றுவீழ்ந்திடில்
கிட்டஒருவரில்லாரே குழி
வெட்டென்பர்பிரேதத்தைக்கட்டென்பர்மண்ணைமேற்
கொட்டென்பர்போவர்பொல்லாரே ஆன்ம
நட்டம்வராமற்கண்பாரே துயர் (இந்த)

3. கப்பம்இல்லாமலேஎப்படியேனுங்
கடலைக்கடக்கவொண்ணாதே நாளும்
அப்படிநின்பதத்தெப்பமில்லார்க்கந்த
ஆநந்தவீடுநண்ணாதே நல்ல
ஞானந்தருவாயிப்போதே கைவிடாதே (இந்த)

4. ஆதிமத்தியாந்தரகிதப்பிரபோத
அபேதபுராதனநாதா நாளும்
காதலுடன்வேதநாயகனுள்ளக்
கமலந்தங்குந்திருப்பாதா எனக்
கமலந்தாஇன்னம்வாதா கிடையாதா (இந்த)

16-இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தஉபகார மறவேனே-பூமி
அந்தரம்எங்குநிறை-கோனே.

அநுபல்லவி.

விந்தைநரஜன்மம்நான் மேவஅருள்நோக்கினாய்
தந்தைதாய்மனைசேயர்தந்துகுறைநீக்கினாய். (இந்த)

சரணங்கள்.

1. குருதியாகியசேறு கூட்டி நல்ல
கொழுமாமிசச்சுவரை நாட்டி
வரிஎன்புவிட்டங்களை பூட்டி தட்டும்
வடமாநரம்புகளை மாட்டி

இருகாவல்நவவாசல் உடல்மனையை வீக்கினய்
இன்பங்கள்நுகர அந்திரியம் ஆக்கினய்
அரிய ஆன்மா அங்குகுடியுறப் போக்கினய்
அந்தஆன்மாவில்நல்லறிவினைத் தேக்கினய் (இந்த)

2 பூமியாகியவீ டமைத்தாய் பஞ்ச
பூநாதிஊழியர் சமைத்தாய்
மாமதுரஉணவுகள் கொடுத்தாய் அந்த
வானமாம்பந்தலும் எடுத்தாய்

சோமசூரியதாரகாதீபம் ஏற்றினய்
சுகவாயுவால்உஷ்பண சோகத்தை மாற்றினய்
சேமஉணவாக்கவேதேயுவினை ஆற்றினய்
சீதக்கடங்கொண்டுதெண்ணீரை ஊற்றினய் (இந்த)

3. கடலாறுகுளம் ஓடை தந்தாய் மலர்க்
காவுகளும் உதவினை யெந்தாய்
தடைமலைதருக்களும் வகுத்தாய் வசனம்
சார்மிருகபக்ஷிகள் பகுத்தாய்

திடமானநவமணிஉலோகாதி நீட்டினய்
ஜெகஜோதியாகவேசிங்காரம் நாட்டினய்
அடமின்றிநானுவினேதங்கள் ஊற்றினய் (இந்த)

4. சிலபரவைகான இசை பாடும் வேறு
சிலபறவைதிருநடனம் ஆடும்
பலமிருகம்நரர்வேலை புரியும் நல்ல
பசுவாதிபாலினைச் சொரியும்

மலர்களிகள்கால்நிழலைமரமெலாம் நீட்டுமே
மண்ணன்னம்விளைவித்துவயிறார ஊட்டுமே
கலதாமுமெங்களைத்தலைமுழுக் காட்டுமே
சர்வபொருள்களும்நல்லசந்தோஷ மூட்டுமே(இந்த)

5. பித்தர்க்குநீசெய் யாரகமே வளம்
பெரிதெனினுமீ தற்பசுகமே
சுத்தர்க்குநீசெய் பேரகமே பரம
சுகமெனவிரும்பும்என் அகமே

பத்தர் அநுகூலநற்பரமகா ருண்ணியனே
பகிரண்டகோடிகள்பரித்திடுந் திண்ணியனே
வித்தகசொரூபமேமேவுநற் புண்ணியனே
வேதநாயகன்உள்ளமீதுவளர் கண்ணியனே. (இந்த)



20-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

சிந்தைக்குள்உறைந்தும்நீ சிந்தைத்துயரந்தனைத்
தெரியாயோசுவாமி

அநுபல்லவி.

அந்தரம்புவியெங்கும் அரசாக்ஷியளிப்போனே
எந்தப்பொருளின்உள்ளும்இருந்தகங்களிப்போனே (சிந்தை)

சரணங்கள்.

1. பாலையும்விஷம்ஆக்கும் பாம்புபோல்கொடுமனம்
பலசுகந்தையும்துன்பம் ஆக்குமே
பூலோகமெல்லாம்வசமாயினும்வேறொரு
புவனத்தையும்பிடிக்க நோக்குமே
காலமுழுதும்இந்தக் கருத்தே யாதனுருபம்
கலியாணவீட்டிலும்கட்டிக்கொண் டழும்சோபம்
மேலவனேஎனக் கிதுவாய்த்த தென்னபாவம்
வேதநாயகனேபா ராயோஎன் பரிதாபம் (சிந்தை)

2 இருதலைக்கொள்ளிநடுவிருக்கும்எறும்புபோல
எந்நாளுந்தொலையா விசாரமே
ஒருசாணாகிய உதரக்குழியடைக்க
உலகில்படுங்கஷ்டம் அபாரமே
தரணியில்வாழ்வென்பதுதானே விஷவிருக்ஷம்
சார்வதா இதில்வரும் சங்கடப் கோலக்ஷம்
தருமயோகாந்தநிலே சார்தல் உத்தமபக்ஷம்
சர்வானுகூலாஉனக் கெல்லாம் பிரத்தியக்ஷம் (சிந்தை)

3. போர்க்களநடுவிலேகுடியிருப்பதுபோலப்
புலசத்துருக்களின்போ ராட்டமே
சேர்க்குந்தசையடிவாந் தேகமிதுபிணியுந்
தீவினைகளுநும்வளர் தோட்டமே

பார்க்கின் இதுவென்சா பசா நடனசாலை
பகலும் இரவும் இதபடியுமே மோகவேலை
நரக்கவைத்தியர்க்குத் தினமுங்கொடுக்கும்வேலை
நினம்வேதநாயகா சேர்ந்தேன் உன் திருக்காலை (சிந்தை)

---

21-இராகம்-யமுனகல்லியாணி-ரூபகதாளம்.

பல்லவி.

சரணம்சரணம் நாதா-உன்
சரணம்தர ஒண்ணுதா.

அநுபல்லவி.

திரணமாகிய காயமே இதில்
தினம் அனந்தம் அபாயமே
மரணம்வருமுன் னேயமே பெற
மகிழ்ந்தருள் சகாயமே கோடி (சரணம்)

சரணங்கள்.

1. பாவியேன் இரு தயமே பவ
பாதகங்களின் மயமே
மேவிடுந்துர்வி ஷயமே வினை
விலக்கி அருள்நன் னயமே

மாயவினைகளை மாற்றுவாய் எதிர்
வந்தென்சிந்தையில் தோற்றுவாய்
சேவைதந்தெனைத் தோற்றுவாய் இந்தத்
தீயக்கரை யேற்றுவாய் (சரணம்.)

2. மசம்இராகது வேஷம் பொய்
வஞ்சகம்பல தோஷம்
எதிலும்நான் விசேஷம் எனக்
கில்லைபுண்ணிய விசேஷம்

மதனப்பேயை ஓட்டுவாய் நல்ல
மார்க்கத்திலெனைக் கூட்டுவாய்
விதனநகரைப் பூட்டுவாய் உன்
வீட்டுக்குவழி காட்டுவாய் (சரணம்.)

23. இ-ம்-உசேனி-ஆதிதாளம்.

பல்லவி.

நின்பதமே துணை சுவாமி-உனைத்
துன்பம் அகல அருள் செய்வாய்

அநுபல்லவி

இன்பமே சோதியே இனிய தயாநிதியே
அன்பர்பரகதியே அமரர்க்கதிபதியே. (நின்)

சரணங்கள்.

1. என்பனைப் இளகாத பொருப்பே பாவை
என்னைநக்கு அதிருதடி விருப்பே
துன்பமே அதற்கரு வெருப்பே கெட்ட
நாமசுனை பெண்ணுன் விருப்பே
உன்னையே கெடுக்கும் இச்சை நாசக்கொடு நெருப்பே
துன்னமெல்லாம் அகலத் திருவருட்கண் திருப்பே. (நின்)

2. ஏதும் அறியேன் ஞான சாஸ்திரம் புவ
னோசாடனைக்குநான் ஏம் பாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம் அதி
தூயனே என் இன்னம் சூத்திரம்
வேதனைமிகக்கொண்டு வெய்துற்றேனை அகோராத்திரம்
சாதகமுறமேவி தருவாய்மெய்ஞ்ஞான நேத்திரம் (நின்)

3. நீசனென் வினைக்கெல்லா மூலம் என்தன்
நெஞ்சஞ்செய்வதும் பிரதிகூலம்
பாசபந்த உலக ஜாலம் தன்னில்
படுத்துகொக்தேன் பலகாலம்
நேசனே கேளாயோ ஏழைநானிடும் ஓலம்
தாசன்வேதநாயகன் தனக்குநீயருள் சீலம். (நின்)

---

24. இராகம்-முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆள்வாயெனதுள மாள்வாயெனக்குன்றன்
அடியிணையே துணையே.

அநுபல்லவி.

நீள்சகத்ததிபனே நேசருக்கினியனே
நாள்வளர் தனியனே நயமறைத்தொனியனே. (ஆள்)

சரணங்கள்.

1. பேதைநான் பயனில்லாப் பேசிச்சண்டப்பிர சண்டம்
பிறரைமயக்குவதிற் பெரியஉற்பாத பிண்டம்
வேதவினைஎனக்கு விளைசருக்கரைக் கண்டம்
விரைந்தருள்புரிஉனக் காயிரங்கோடி தண்டம்
வேதனே-வரப்பர-சாதனே-ஆவிர்
வாதனே-சுரர்பு ழ்கொள்-காதனே-நாதனே எனை. (ஆள்)

2. மனமெனுங்குரங்குக் கனஅறமே உபேக்ஷை
யாதனைநீக்கிடாமல் ஏதின்னமும் பரீக்ஷை
தினகரரூபனே திவ்யமெல்லாஞ்ஞான தீக்ஷை
திடமுடன்கொடுத்தருள் அதுவேஎன தபேக்ஷை
தேவனே-மனோ-பாவனே-மறைசொல்
நாவனே-தயைநிறை-சுபாவனே-ஜீவனே எனை (ஆள்)

3. நிகரில்கனதெய்வீக நின்மல சலக்ஷணா
நித்தியம்நினையும்பக்தர் நெஞ்சப் பிரதக்ஷணா
சகலஜீவாத்மகோடி தாங்கும் சம்ரக்ஷணா
சாஸ்திரம்புகலுஞ்சுரர் ஸ்தோத்திரா மிர்தபக்ஷணா
தாங்குவாய்-கெஞ்சில்-ஓங்குவாய்துயரம்
நீங்கவே-வேதநாயகன்-பாங்காய்-நின்றனுதினம். (ஆள்)

---

25 இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

தேவநாயகனே என்மீதிலுன்
திருவுளம் இரங்குவையே.

அநுபல்லவி.

ஜீவன்முக்தியூர்ஜித சிலபிதுரார்ஜித
தாவில்அதிபூஜித சர்வசமயோசித. (தேவ)

சரணங்கள்.

1. கரதலாமலகம்போல் உனக்குயாவுந் திர்ஷ்டாந்தம்
கர்த்தனே அறியாயோ நீஎனது விர்த்தாந்தம்
பரவும்பதங்களென்றால் பாலகர்க்குப் ஆனந்தம்
பலபதங்கேட்டுந்தயை பண்ணாயே தோஷித்தாந்தம்
பற்பல-கற்பல-உற்பவ-வுற்பன
கற்பனே-செப்பரும்-அற்புத-உற்பன (தேவ)

2. தனமிகுவேண்டுவோர்க்குச் சல்லியோடு தனமோ
தாகமுள்ளோர்க்குக் கானல்ஜலமது பானமோ
கனசுகந்தேடெனக்குக் கவலைசன் மானமோ
கதியருள்வாயுனக் கதுபாவ தீனமோ

கர்த்த-சமர்த்த-பிம்வர்த்தன
பக்தர்கள்-சுத்த-அகத்துறு-நிர்த்தன (தேவா)

3. தினமும் அனந்தபாவஞ் செய்வதென் சாம்பிரதாயம்
சிந்தைக்கறங்கசப்புசேர் வேப்பிலைக் கஷாயம்
இனைவேதநாயகனென்றேற்றேன் உன் னாமதேயம்
எனக்கல்லாவிடினும் அப்பெயர்க்கேனுஞ் செய்சகாயம்

எம்பர-உம்பரும்-நம்பிய
அம்பர-சம்பிரப-இன்பம்-நிரம்பிய. (தேவா)

---

26-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

ஈசா நின்பொற்பாத மலர்நம்பினேன் என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ்செய்தருள்

அநுபல்லவி.

தாசர்மனகம லாசனகேசர
சாசுவதயோக சாம்பிராஜ்யகிரகேசுர
ஆசைக்கினிய அவாங்மனோகோசர
அண்டபிரமாண்ட அகண்டசராசர (ஈசா)

சரணங்கள்.

1. எத்தனையோபேர் சுகித்தயர் வீட்டில்
எனக்கிடம்பூச்சியமா ரையை
சித்தங்கொள்வாயெனப் பித்தனெக்குந்
தினமனோராச்சியமா நல்ல

நித்தனே இன்ப மிகுந்தமுத்தி நலன்
நீதரில்வானவ ரோதுவரோ கலன்
சத்தில்வழுக்கவர் பேசிஎன்ன பலன்
தாயேஉற்றதுணை நீயேபின்வேறி லேன் (ஈசா)

2. மாருணபாசசை யோகமின்றிப்புவி
வாழ்ந்தவர்தாமெவரோ எங்கும்
ஏகும்நெஞ்சன்னரு காகவராதிதற்
கேகுறுக்ஏச்சுவரோ விஷ

நாகமாயைக்கெங்குஞ் சர்வ கொள்ளையோ
நான்பயனில்லாமற் பேசிடுங் கிள்ளையோ
ஆகிலுமென்புத்தி தானசுத்த வெள்ளையோ
ஐயனேநானென்ன தாயிலாப் பிள்ளையோ. (ஈசா)

3. வந்துன்தரிசனந் தந்தருளிலென்
மனக்குறைதீரேனோ உன்தன்
சுந்தரபாதமென் சிந்தனையூன்றிற்
சுகக்கடல்சாறேனோ பெரும்

பந்தமெருப்புக்கென் சிந்தனை செத்தையா
பாவியென்றென்னைக்கை நீவிடில் சத்தையா
விக்தைநலந்தந்திடல் பெரு வித்தையா
வேதநாயகன்பங் கென்ன சொத்தையா. (ஈசா)

---

27-இராகம்-துவாந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதியே பரஞ்சோதியே எனை
ஆதரித்தருள்வாயே.

அநுபல்லவி.

ஓதிஉணரஒண்ணு தோங்குங்குணாகர
நீதிவடிவமுறு நின்மலசாகர. (ஆதியே)

சரணங்கள்.

1 உலககாரியத்தில் நான்வெகுகிராணி உன்னை
உன்னுவதிற்கேவலம் அப்பிராணி
நலம்என்பதெனக் குண்டோமாகாணி என்தன்
நவையேற்றப்போதுமோ ஆயிரந்தோணி
மலவசமாகிச் சேர்ந்தேன்
தலைவாஉன்னடி சார்ந்தேன்
மதிக்கும்அடியர்கள் துதிக்கும்ஆரிய
குதிக்கஈனென உதிக்கும்வீரிய. (ஆதியே)

2. கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி சிவன்
கழியுமுன்னல்லவோ புண்ணியகாட்சி
மண்ணில்எனக்கு ஞான அரசாட்சி
வாய்க்கும்படிஐயனே நீகடாட்சி
எண்ணரிய பிரதாப
நண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும்அமரர்கள் வணங்கும்பெருவர
மணங்குலாவு சுகுணங்கொள்குருபா. (ஆதி)

3. தீதுபொறுத்தல் தெய்வகுலதர்மமே
செய்கைகளே மனுஷகுலதர்மமே
ஓதிவிட்டேன் உனக்கென்உள்மர்மமே -என்மேல்
ஓகோஐயனே இன்னம்ஏன்வர்மமே
பாதகமஅனி வேதநாயன்பணி
படர்ந்ததிருவருள் அடர்ந்திடபுரம
கடந்தஞானியர் தொடர்ந்தசம்பிரம. (ஆதியே)

---

28-இராகம்-கேதாரம்-ஏகதாளம்.

பல்லவி.

தேவனே உனைநம்பினேன்
அடியேனை ஆண்டருள்

அநுபல்லவி.

தேவா-துரித-அபாவ-சுகுண-சுபாவ
மகாநு-பாவா-வாவா (தேவனே)

சரணங்கள்.

1. ஐயாநிலைஅறு பொய்யாம்உலகினில்
நையாவகைஅருள் செய்யாயோஉயர். (தேவனே)

2. வாராயோமுகம் பாராயோஅருள்
கூராயோவினை தீராயோகன. (தேவனே)

3. பெரியாய்கைவிடல் சரியாகான்வினை
புரியாவிதம்அருள்சொரியாயோஉயர். (தேவனே)

4. நொந்தேன் வினையுட வெந்தேன் உனதிடம்
வந்தேன் சகதியிலே தந்தே அருள்புரி. (தேவனே)

5. தாதா அருளஒன்ஞு தாமனம் இரங்
கா தா அனுதினம் வேதநாயன் பணி. (தேவனே)

---

29-இராகம்-கர்நாடகமாதி-ஆதிதாளம்.

பல்லவி.

பரனே-அடியர்மனே-கரனே-நிமலதினே
கரனே-நீ அருள்-தரனே.

அநுபல்லவி.

உரனே மிருப்புவன தரனே அகண்டசரா
சரனே பரமசுக கரனே திரனே அறும். (பரனே)

சரணங்கள்.

1. என்னைவந்திருக்கும் ஏழை தன்னைநான் தள்ளிவிடில்
ஈசனே கோபம்பண்ணுவாயோ தங்கை
அன்னை பேனை யிரக்கும் என்னை நீதள்ளில்எனக்கும்
அவ்விதமென்றே எண்ணுவாயோ

முன்னை நீ அனேகரை உன் பொன்னடியிற்சேர்த்தனை
இன்னமும்பலபேர்தமைப் பின்னும்வினை தீர்த்தனை
என்னவேநாட்கேட்டுன்மீது சொன்னேன்பலகீர்த்தனை
பின்னையொன் றும்வேண்டேன் அருள் உன்னையிதெபிராத்
[தனே.(பரனே

2. உத்தமனே நான்பெரிய பித்தனுயினும்உனை
அடுத்தவனென உன்னுவாயோ பாரில்
சித்தமிசைபத்தியமிகுத்தபாலகனைக்கை
விடுத்த லுவதாளாயோ

முத்தொழிலில்முதல்தொழில்கொண்டுசெய்தாயென்சடம்
மூத்தஞானம்அளித்தெனைக்காத்தருளாயேன் ஹடம்
அத்தனே அவ்விரண்டாந் தொழிலில்என்சங்கடம்
அதுதரில்மூன்றாந்தொழிற்கஞ்சிடேன் இதுதிடம்(பரனே)

2. பாடுகவியிற்கற்பனை தேடுவதல்லால் உன்னருள்
கூடும்வகைகுறியேனே-என்னை
நாடும்எவரோடுமே வாதாடுவதல்லால்என்வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலிற்பாதமலர் சூடுபெரியோராக
வாசபுவனேச வுரபாசவினைமாரக்
கிடுதவுதியாக அலைபாடுகெடற்பாராக
மீதுவேதநாயகன் எப்போதுமேகொள்தாரக.　　(பரனை)

---

30-இராகம்-பிபாகடை-திரிபுடைதாளம்.

பல்லவி.

அம்புயப்பதம்நம்பினேன்ஐயா-பரலோகசாதக
சம்பிரமத்தைவிரும்பினேனை மெய்யா
கதியாக்கையா

அநுபல்லவி.

தம்பமாம்அவலம்பம்வேறிலையே தேவாதிதேவர்கள்
சகிதமாகியசுகிதமாமலையே மெய்ப்போதநிலையே. (அம்புய)

சரணங்கள்.

1. தினமும்அலையுமென்மனமேகீசகமா - அடியேனுன்பால்இ
ஷ்டசித்திவேண்டியே நித்தியம்யாசகமா
கனஅநீதனென்மீதரோசகமா - என்சொல் உன்காதுக்குக்
கடினமாகிய கொடியவாசகமா
நாஞெருவாசகமா.　　(அம்புய)

2. மண்ணின்வாழ்க்கையில் எண்ணிபாதனையேஅதுநீங்கவேய
ருமன்னிடாமலேன் இன்னஞ்சோதனையே　　(ள்
தின்னியம்பெறு புண்ணியசாதனையே-அடியேனுக்கேஸ்வா
தீனமாகச்செய்ஞானபோதனைசே
செய்தேன்வந்தனையே.　　(அம்புய)

3. எண்ணிமகிழ்ந்திடு புண்ணியவிக்கிரகமே-பரிசுத்தசீலர்கள்
இஷ்டபூரண துஷ்டநிக்கிரகமே
விண்ணினோர்தினம் நண்ணுசுக்கிரகமே-இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுக்கிரகமே
பணியார்உக்கிரகமே.　　(அம்புய)

31-இராகம்-ஆகிரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

சம்மதியெனக்குமெய்யனே உனைநினைக்க
நன்மதிதந்திடில் ஐயனே.

அநுபல்லவி.

அம்மவென்றழ மேன்மேலும்
வெம்மனநோயே சூழ்ந்தாலும் (சம்மதி)

சரணங்கள்.

1 தன்னை உன்னவே கூடாதென்றே தடைசெய்வோன் தான்
இந்நிலத்துண்டோ குணக்குன்றே
நின்னையே தொழவிரதம்
நேர்ந்தனே அனவரதம்
உன்னவே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர்தனம் நீங்கியொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கிபழியினும். (சம்மதி)

2 பதமலர்மேல்ஆசைகொண்டேனே உலகவாழ்வு
சதமலவென்றுமைகண்டேனே
நிதமுனைப்பணியுமதி
நீதர இலையோவிதி
அதிற்குறையுமோஉன்நிதி
அண்டினேனுனுன்சந்நிதி
அடறும்வறுமையோ டிடர்கள்சூழினும்
படரும்மனந்துயர்க் கடலில்ஆழினும். (சம்மதி)

3 உத்தமபிரமசைதன்னியமே சௌஜன்னியமேமெய்ப்
பத்தர்கள்அல்லா தாக்கன்னியமே
சுத்தமதுரபாஷணா
போபனகுணபூஷணா
வித்தகவிசேஷணா
வேதநாயகன்போஷணா
விலகியேஎனை உலகம்நகைக்கினும்
கலகமாகவே பாலர்கள்பகைக்கினும். (சம்மதி)

32-இராகம்-கேதாரம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே-உயர்-மெய்யனே.

அநுபல்லவி.

உய்யவே அருள்புரி செய்யபதந்தந்தெனை (ஐயனே)

சரணங்கள்.

1 ஈசனேநான் ஆத்ம இரக்ஷண்ணியமே பெற
இரங்கியருள்கடாக்ஷ வீக்ஷண்ணியமே
தாசன்நானுனக்கென்னுந் தாக்ஷண்ணியமே கொண்டு
தந்தருள்வாய்விவேக தீக்ஷண்ணியமே. (ஐயனே)

2 இகனினி அழிந்து போம்நில்லாது அதை
ஈந்தனம்போது மென்றால்சொல்லாது
நிகள்நித்தியசுகந் தந்தால் அல்லாது சற்று
நில்லாமல்நச்சும் என்வாய்பொல்லாது (ஐயனே)

3 கோதையர்மைந்தர் முதற்பரிஜனமே சங்கைக்
கூட்டம்அவர்மேற் கொள்ளுந்தரிசனமே
வேதநாயகனுக்குன் தெரிசனமே. (ஐயனே)

---

33-இராகம்-ஜயந்தஸ்ரீ-ஏகதாளம்.

பல்லவி.

நாதாநிரந்தர-விநோதா-உன்தன்
பாதாரவிந்தம்-எனக்-காதாரம்-தாதா.

அநுபல்லவி.

வேதாந்தசார நயபோத பஞ்ச
பூதாந்தகால விபரீதா பிரக்கியாதா ஜெக. (நாதா)

சரணங்கள்.

1 பேசருஞ்சர்வ புவனேசா நல்ல
தாசர்மனாலயவாசா பாவநாசா ஜெக (நாதா)

2. மாவந்தரலங்காதா வினை
போவெனநீசொலற் போகாதா சாகாதா புவி(நாதா)

3. மாயையின்சப்தமேநிசமா அந்தப்
பேயைக்கொல்வ தனக்கவசமாதாமசமாதெய்வ

4. அடியன்மனங் கடினஇரும்பா அருங்
கொடியவினை அதற்குக்கரும்பா நாமேனோர்துரு
[ம்பாஜெக (நாதா)

5. ஆதிமத்திய அந்தரகிதா சுயஞ்
சோதிமய அமரர்சகிதா கனசுகிர்தாமகி()

6. மயாந்தகாரம் அகில்கிரணு வேத
நாயகன்தொழுமலர்ச்சரணு அந்தக்காரணு தெய்வ (நாதா)

---

24-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

காக்கவேண்டும்-கடவுளே-நீகாக்கவேண்டும்

அநுபல்லவி.

காக்கவேண்டும் எனை அன்பன் ஆக்கவேண்டும் என்கவலை
நீக்கவேண்டும் பாவமெலாம் போக்கவேண்டும் தினமெனைக்

சரணங்கள்.

1. பண்ணியவினையுமனம் எண்ணியும்வினையும்வாக்கில்
நண்ணியவினையுந்திரக் கண்ணியவரந்தந்தெனைக்(காக்)

2. ஆரணனேநீகொடுத்த தாரணிசெல்வத்தின்மனம்
பூரணமானேன்பவநி வாரணசுகந்தந்தெனைக் (காக்க)

3. எந்தவேளைமரணமோ அந்தவேளைவந்துன்அர
விந்தமலரேங்கருஞ் சுந்தரஅடிதந்தெனைக் (காக்க)

4. பூதமுதலானஜீவ பேதகாரணனேநாளும்
வேதநாயகன்பிரக் கியாதபூரணனேஎனைக்

## 35-இராகம்-கேதாரகௌளம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஈசனேமல நாசனேமல வாசனேபிர காசனே.

அநுபல்லவி.

பாசஇருளினை நீக்குவாய் உன்தன்
பாதத்துக்கெனை உற வாக்குவாய். (ஈசனே)

சரணங்கள்.

1. சிறியன்மதிவெறும் ஸ்தூலமே அதன்
செயலெலாம் அலங் கோலமே
குறிகொள்பாச நிர் மூலமே செய்து
குணந்தந்திட இது காலமே
அறியநாடும் ஓலமே செவிப்
பொறிகொண்டுதவனு கூலமே. (ஈசனே)

2 அடருங்காமங்கொள் பேழையே நிகர்
ஆகும்உடலெனும் பாழையே
திடமென்றுன்னும்நான் ஏழையே குறை
தீரக்கற்றறி மோழையே
தொடுசிலேட்டுமக் கோழையே உயர்ந்த
திடுமுன்தொலைப்பவப் பீழையே. (ஈசனே)

3. என்னைக்கெடுத்திடக் கச்சையே இடை
இறுக்கிக்கட்டிக்கொண் டிச்சையே
முன்னைவருந்திடக் கொச்சையே கொண்டுன்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவரத திபாக மழைபொழி
பண்ணும்வேதநா யகன்வெவ் வினையொழி. (ஈசனே)



## 36-இராகம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

நிரந்தரனே மா துரந்தரனே கன
நிர்மலத்துவ தர்மகர்த்தத்துவ.

அநுபல்லவி.

பரந்தபேரருள் சுரந்துகாத்தருள்
வரந்தந்தென்வினை விரைந்துதீர்த்தருள். (நிரந்தரனே

சரணங்கள்.

1. சித்தமிரங்கினள் எத்தனை நீதையை
செய்யிற்பிழையேனோ-கன
நித்தனே என்பிழை எத்தனை என்னினும்
நீங்கிநீதழையேனோ-நல்ல
உத்தமம்என்னிடம் சுத்தசரித்திரம்
ஒன்றோபலவிதம் என் துர்ச்சரித்திரம்
நித்தம்என்னெஞ்சம் உடுத்தமால்வஸ்திரம்
நீங்கினனேச்சேர் சௌபாக்கியசமுத்திரம்.(நிரந்தரனே)

2. உதிமதிகதிர் முதலெல்லாஞ்செல்லும்
உன் ஆணைவழியே-எந்தன்
கதியொன்றே அந்த விதியைக்கடந்து
வளர்க்குமாபழியே-இந்தப்
பொதிமதிக்கேன் தனியரசாக்ஷியே
புனிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
புனிதனுனென்பதற் கென்செய்கைசாக்ஷியே
பாவன்னீயென ஈவாய் அத்தாக்ஷியே (நிரந்தரனே)

3. பாரிருள்நீக்காத சூரியனாலே அப்
பாருக்கென்னசாரம்-ஞான
ஆரியனேஉன்முன் சாரலாமோஎன்
அகத்தில்அந்தகாரம்-நாளும்
சாரமில்லாச் சமுசாரகோலாகலம்
சாருமெனக்கென் றுந் தீராவியாகூலம்
வீரனேநீபறிவா யென்பலாபலம்
வேதநாயகனே நீதருவாய்நலம்.(நிரந்தரனே)



37-இராகம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

அப்போதுனைத்தொழல் அரிதையா-உனை
இப்போதேதொழ அருள்செய்யாய்.

அநுபல்லவி.

முப்போதும்உணரு முதலேசுரர்தொழும்
அப்பாமரணம்உற் றடியேன் உடல்விழும் (அப்போ)

சரணங்கள்.

1. திடமாய்கற்பாறைபோலே திரண்டுசோறைமாள்மட்டும்
சிறிதும்பேசாதவண்ணஞ் சேர்ந்திறுகிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெளிப் படஎங்கும்ஓடிமுட்டும்
பாரிதுவேளையெனைப் படுமாயைதொடைதட்டு
பலங்கொள் உணர்வது கலங்கிநிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிமெலிவுறும்

2. மனைவிசேய்கடன்காரர் மண்டிவார்த்தைவிரிப்பார்
வகையெமக்கென்னவென்று மணல்கயிறுத்திரிப்பார்
மனையிற்பொருளையெல்லா மாவலைபோட்டரிப்பார்
வகையென்றுமின்றேற்கையால்மணித்தொண்டையைநெரிப்பார்
மடங்குகழல்கர முடங்குசெயலோடு
திடங்கொள்கானமும் அடங்கிமாளுறும். (அப்போ)

3. அழுகைக்குரலும்பல முழக்குமும்நாளுபேதம்
ஆகப்பலபக்கத்துக்கும் அடக்குமேகடனுதம்
விழுகையுறும்உடலின் வேதனையுர்பிரமாதம்
வேதநாயகனேஅப் போதுனைஉன்னவேதம்
விரிக்கும்இடர்பல தரிக்கும்உடலினை
முரிக்கும்இசிவொடு மரிக்கும்வேளையில். (அப்போ)

---

38-இராகம்-காம்போதி-ஆதிதாளம்

பல்லவி.

எவ்வகையிலும் நானே-நல்வழிபற்றி
உய்வகை அருள் கோனே.

அநுபல்லவி.

செல்வழிநிற்போர்மனத் தேன்கள்வளரும்பூவே
பௌவமாகப்பேரின்பம் பழுக்குங்கற்பகக்காவே. (எவ்வ)

சரணங்கள்.

1. வறியபாக்கிடவென்றாலென் குறியகைகளிற்கூலே
வாங்கநீட்டின்உலகும் வானமும்எந்தமூலே
பிறர்கோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலே
பேதைஎன்பிழைஎழு திடவேண்டுங்கோடியோலை. (எவ்)

2 பண்ணில் அறு திணைப்பூக தேகம்
வளர்ப்பதெனக் கசலா உத்தி யோகம்
உண்ணியஉடல் வளர்த்திடும் வைதீகம்
பூண்டிலேன் அருள்வாய் விவேகம்

3. விதகவிஷகரு கிரகஸ்தாச் சிரமம்
விருப்புவோர்க்கிதில் விலகிடாச் சிரமம்
கிதக்கொண்டேன் இந்தவாழ்விலே பிரமம்
நீங்கவேதநாயகனே அருள் கிரமம் (வே)

---

பல்லவி

எனக்குக்கட்டியவீட்டை-எனக்குக்கொடாதிருப்ப
தென்னஞாயம் ஸ்வாமி.

அநுபல்லவி

இனிக்கும் அவ்வீடுசெய்தெங்கள்நித்தியமே
என்றுந்செய்ய வில்லையோவாக்குசுத்தமே
உனக்குநான் பிள்ளை யென்பதுலகப்பிர சித்தமே
உவந்துகேளாயோ என்பிரலாப சத்தமே. (எனக்கு)

சரணங்கள்

1. சித்தவிகாரமுறு நரர்க்குச்செய்யிவ்வுலகம்
சிறப்புள்ளதெனில்கோனே நல்ல
உத்தமர்க்கமைத்தநித்தி யானந்தமுத்தியின்பம்
உணர்வதெப்படிநானே

சுத்தமணிபொன் அங்கேதுரும்புகள் ஈட்டமே
தொல்லுலகின்பமெல்லாந் துன்பம்போல்ஓட்டமே
அந்தமிலாநித்திய சூரியர்அன்பர்கூட்டமே
அநுதினம்எனக்கந்த வீட்டினில் நாட்டமே (எனக்கு)

2 முகமுகமாகஉனைத் தரிசிக்கும்பாக்கியத்தை
மொழியநினைக்க ஒண்ணுமோ இந்த
இகமிசைமனமொடு புலன்கட்கெட்டாதஅந்த
இன்பம்எப்போது நண்ணுமோ

அகமிசைஉன்னஉன்ன ஆனந்தம்பொங்குமே
ஆயிரங்கோடி சூரியர்ஒளிமங்குமே
நிகரறுகீத விநோதங்கள்எங்குமே
நிரதிசயானந்தம் நிரந்தரம்தங்குமே (எனக்கு)

3. இகமனைகட்டிநகர் குடும்பபிரதிஷ்டைசெய்த
இணையறும் எந்தாயே நித்திய
சுகமனைதன்னில் பிரவேசிக்கவேநல்ல
சுதந்தரம் அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாடகசூத்திரனே
அற்புதபரமசித்தி யானந்தக்ஷேத்திரனே
நிகரறுசௌந்த்ர நிர்மதகாத்திரனே
நிதம்வேதநாயகன்தொழுங் குணபாத்திரனே (எனக்கு)

---

43. இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே-உன்-அழகைக்காண
ஆசைநான்-கொண்டேனே. (ஐயனே)

அநுபல்லவி.

வையமீதுபல அழகையும்
வகைவகையா வகுத்துக்காட்டும். (ஐயனே)

சரணங்கள்.

1. உதயசூரியன் சோமன்தாரகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னும்குப்பைகள்
நிகருமோஉனை இனியே. (ஐயனே)

2. கனியுந்தேனும் பாலும்சீனியும்
கண்டுங்கரும்பும் சிறுமை
இனியஉனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும் வெறுமை. (ஐயனே)

3. செழுமையாகிய வண்ணமலர்கொள்
சிங்கார வனக்காட்சி
அழகின்ஆலய மானஉன்முன்
அதற்கெடி-தனையோ தாட்சி. (ஐயனே)

4. அதிசவுந்திர மயில்குயில்கிளி
யாதிபறவைக் கூட்டம்
விதியின் அவை செய்யின் னழகின்முன்
வெட்கிப்பஞ்சுபோ லோட்டம். (ஐயனே)

5. சத்தஸ்பரிச ரசரூபகந்தந்
தான்அல்லாத பொருளே
எத்தன்மைஉன தருவென்றறிய
இன்பக்காட்சி னருளே. (ஐயனே)

6. பதியில்நீசெய் பலப்பொருள்களைப்
பார்க்கபார்க்க வடிவே
அதிசயம்தரும் உந்தன் அற்புத
அளகினுக்குண்டோ முடிவே. (ஐயனே)

7. பிறந்தநாள்முதல் தாயைக்காணுப்
பிள்ளைதன்னை ஒத்தேனே
சிறந்தவேத நாயகாஉன்மேல்
சிந்தையாவும் வைத்தேனே. (ஐயனே)

---

44. இராகம்-மாஞ்சி-ரூபகதாளம்

பல்லவி.

என்னை நீ ஆளுவாய்-ஏகனே-யோகனே-என்னை

அநுபல்லவி.

பொன்னைமாதைப்பூவை எண்ணம்
பூண்டுநான்கெடாத வண்ணம் (உன்னை)

சரணங்கள்.

1. யாதனுசரீரமே யாதுமில்லைசாரமே
வாதபித்தவிகாரமே வாதனைகள் அபாரமே
மலநிவாரணு வடிவபூரணு
நலஉதாரணு ஞானகாரணு (என்னை)

2. எந்நாளும்கிலேசமே என்னெஞ்சிற்பிரவேசமே
பந்தவினையைநாசமே பண்ணிநீசெய்வாசமே
பதிதபாவனு பரமஜீவனு
அதிகசோபனு அகிலஸ்தாபனு (என்னை)

5. அன்னைதந்தைநீ அலவோ ஆயிரந்தரஞ்சொல்லவோ
என்னைமாயைகொல்லவோ எங்குநான் இனிச்செல்லவோ
ஏகபேதகா விமலநாயகா
வேதநாயகா விமலநாயகா



45-இராகம்-சைந்தவி-திரிபுடை-தாளம்.

பல்லவி.

ஏழைக்கிரங்கலுண்ணுதா-இந்த-ஏழை

அநுபல்லவி.

ஆழக்கடல்உலகை ஆளும்விநோதா (ஏழை)

சரணங்கள்.

1. சாடும்பிரசண்டக் காற்றாலே-திசை
தப்பியே அலைபடும் கப்பலைப்போலே
நாடும்பிரபஞ்ச மாலே-என்னை
நைவிக்கவாடினே னபுவிமேலே. (ஏழை)

2. நீசெய்வதெல்லாம் சகாயம்-இங்கே
நிறந்தரம்என்செய்கை யாவும்அந்நியாயம்
ஈசனேநின்பத நேயம்-எனக்
கெள்ளளவுமில்லை ஈதென்னமாயம் (ஏழை)

3 அற்பசுகத்துக் குழைத்தேன்-பாரில்
அநுதினம்ஆயிரம் பொய்சொல்லிப்பிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன்-துன்பப்
பாரம்பொறுமலே பரிந்துன்னை அழைத்தேன் (ஏழை)

4. ஆன்மபத்தினி மணவாளா-அகி
லாண்டபிரமாண்ட அகண்டகோளா
வான்மகிழ் தீனதயாளா-தினம்
மகிழ்வேதநாயகன் வணங்கும்பொற்பாதா (ஏழை)

46-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

கருணாகரப்பரம்பொருளே-அடியனைக்
கண்பார்த்தருள்வாயே (கருணா)

அநுபல்லவி.

இருளைசஞ்செயும் இரவிசமான
தெருளுடைய தேஜோமயம்ஆன (கருணா)

சரணங்கள்.

1. தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொப்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிரியேன்
ஈன்றவநீயென என்றுமேகுறியேன்
என்னசெய்வாயோ வென்றேங்கினன்சிறியேன் (கருணா)

2. தாணியில்நான்ஒரு தருவெனமுளைத்தேன்
தமகுணம்யாவுமே சாகையாக்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளைவிளைத்தேன்
கண்டனைசெய்வை யென்றஞ்சியேகளைத்தேன் (கருணா)

3. நிகிலலோகங்கட் கெல்லாம்நீயதிகாரி
நிச்சயமாஎன் மனம்தினக்கொருபகாரி
அகிலந்தனிலே அந்தமனம்அகங்காரி
அடக்கிஆளாவிட்டால் அழியாளோநாரி (கருணா)

4. அழகுக்காலயமான அமிதசுந்தரமே
அன்பருக்கருண்மழை பொழியுங்கந்தரமே
தொழுதிடும்வேதநாயகன் சுதந்தரமே
துணைநீ உனை நம்பினேனிரந்தரமே (கருணா)

---

47-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஏனின்னம் தாமதமையா
என்னிடம்வர (ஏனின்)

அநுபல்லவி.

தானேஉமக்குமுத்திக் தலமொன்றுமில்லையோ
தானமுத்தரைவிட்டு வரமனமில்லையோ (ஏனின்)

சரணங்கள்.

1. சூரியனைத் தாண்ட — அகன்றீரோ-அந்தச்
சோமனுக்கொளிதரச் — சென்றீரோ
பாரினைப்புரட்டியே — நின்றீரோ-அதில்
பகல்இரவுண்டாக்க — மூயன்றீரோ
காரிலிருந்து — கனமழைசொரிந்தீரோ
கர்பத்தில்சிசுக்களையே — புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க்குயிராய் — விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் — செய்துதிரிந்தீரோ (எனின்)

2. அண்டகோடிகளைத் — தூக்கினீரோ-நவம்
ஆகச்சில அண்டம் — ஆக்கினீரோ
கண்டகர் உலகை — நீக்கினீரோ-கடல்
கரையைக்கடவாமல் — தேக்கினீரோ
அண்டும்பல்லுயிர்க்கமு — தூட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும் — வேலைகாட்டுகின்றீரோ
மண்டுங்கனிக்குச் — சுவைகூட்டுகின்றீரோ
மலருக்குபலவண்ணந் — தீட்டுகின்றீரோ (எனின்)

3. மரஞ்செடிபயிர்கள் — நிறைத்தீரோ-அவை
வளரவேதண்ணீரை — இறைத்தீரோ
சுரர்கள்இசைகேட்டுக் — களித்தீரோ-நல்ல
தொண்டர்இதயத்தில் — ஒளித்தீரோ
பரமகிருபாகர — பரஹிதநேசரே
பரமதகண்டன — பாபவிநாசரே
சருவவிநோத — சராசரவாசரே
தாசவேதநாயகன் — தன்பிராணேசரே (எனின்)

---

48-இராகம்-மத்தியமாவதி-ரூபகதாளம்.

பல்லவி.

இவ்விளவுதான் ஐயனே-அதிகம் அல்ல
இரங்கிய அருள்மெய்யனே

அநுபல்லவி.

அவனியில்வளரும் மூவாசையைப்பரிகரி
எவளவுமேதுன்பம் இல்லாமல்ஆதரி
இதயமலர்தரி விதனமதுபிரி
நிதமும்அருள்புரி இதுவேசரிசரி (இவளவு)

1. படிமீதினிலெண்ண முடியாஉதவிகள்
அடியேனுறச்செய்த பெரியானே
கொடியேன்உனை அரை நொடியாகிலும்தொழும்
படியேஅருள்நிலம் பிரியானே

தூயர்க் குரியானே
தீயர்க் கரியானே (உன்னை)

3. அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
தயமேவெழுகன உருகாதோ
ஸ்வயமேபரமாதி சயமேவேதநாயகன்
நயமேவினைதெய்வம் பருகாதோ

துன்பு கருகாதோ
இன்பு பெருகாதோ (உன்னை)

---

51-இராகம்-பந்துவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

கடைக்கண்ணால் என்னைப்பராய்உன
தடைக்கலம் வினைதீராய் (கடைக்)

அநுபல்லவி.

கிடைக்கெண்ணப் பதந்தாராய் நலம்
படைக்கவேஅருள்கூராய் அருட்
கொடைக்குநாமென்னவே யவதரித்த
கோலாகல-மூலா-அநு-கூலாகுண நீலாநிதம் (கடைக்)

சரணங்கள்.

1. வஞ்சகமாயையில் ஆழ்ந்தேன்-ஒரு
தஞ்சமென் றுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றெனை ஆதரித்தாளுவாய்
ஐயாமிகு-பொய்யால்மனம்-நையா தருள்-மெய்யா-ஒரு (கடை)

2. ஐயனே தீரா யென்பாபம்அருள்
செய்யஉனக் கென்னலோபம்
வையகமாதி வளர்அண்டம்யாவினும்
வாசாபுவ-நேசாமற-நாசாபிர-காசா-ஒரு (கடைக்)

3. அஞ்சலெனில் உன்வாய் நோமோ ஏழை
நெஞ்சம்வருந்திட லாமோ
பஞ்சமோகைப்பொருள் கொஞ்சமோபூபரி
பாலா-அரு-கூலா-ஒரு-மேலாமுதல்-நூலா-ஒரு (கடைக்)

4. இத்தரைமீதினில் நீயே நல்ல
பத்தரைக்கார்க்கவந் தாயே
சித்தமுவந்தெனை நித்தமும் ஆளொளிர்
தேகா-கண-யோகா-அதி-தியாகா-தனி-ஏகாகுளிர் (கடைக்)

5. பூதலம்போற்றும்பொற் பாதா அரு
மாதவஞானப்பிர சாதா
வேதநாயகன்பாடுந் தமிழ்க்கருள்
வேதா உயர்-நீதாகண-தாதாநய-போதா உன் (கடைக்)



52-இராகம்-அசாவேரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

பாசத்தால் மனம்வாடினேன்-உந்தன்
வாசத்தால் மலர்கூடினேன்

அநுபல்லவி.

நேசத்தோர்கள்கை வல்லிபமே உயர்
நிர்மலாதித்த துல்லியமே கன
மாசற்றோரெங்கும் பிரபல்லியமே ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமே மல (பாசத்)

சரணங்கள்.

1. நினைவிலேன் பிழையாமே எண்ண
நினைக்குந்தானென்ன சாத்தியமா
எனைவருத்தும் இந்திரியப்பேய்தனக்
கித்தனை ஆகாத்தியமா
வினை எனக்கு விரோதியா என்றும்
விலகிடாக்கர்ம வியாதியா கொடு
மனமுமே பிரதிவாதியா கெட்ட
மாயை என்ன தாயாதியா ஐயா (பாசத்)

ஏ

2. இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
   கிடைவிடாமன              வாட்டமே
மருவும்பக்தப்பசாசு              தன்னோடு
   மாறிடாத              போராட்டமே
கருமமாயா              விகாரமேசெய்யும்
   கலகஜாலம்              விஸ்தாரமே நல்ல
தருமம் எனக்குத்              தூரமேபின்னும்
   தப்புகள்கற்பக              பாரமே ஐயா (பாசத்)

3. வளர்கல்யாணத்தில் தாலிபூட்டிட
   மறக்குமூடர்கள்              போலவே
   தளர்பிரபஞ்சவியாபாரத்தால்              உந்தன்
   தாள்மறந்தனன்              சாலவே
உளவியாதிக்கா              ரோககியமே நிதம்
   உன்னுவோர்கள்              மனோக்கியமே நலம்
விளையமாமறை              வாக்கியமே-தொழும்
   வேதநாயகன்              பாக்கியமே-பக்த (பாசத்)

---

53-இராகம்-கன்னடகௌளை-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-ஞான-ஜோதிதர ஒன்றுதா

அநுபல்லவி.

பூதலம்பரவும் விநோதனேகனஅ
நீதமாய் இருள் பேதமாகவே (ஆதி)

சரணங்கள்.

1. காமக்குரோதமதம்              லோபம அகங்
காரம்பொய்மாற்சரியங்              கோபம் இன்னும்
பூமியிற்பலபல              பாபம் செய்யும்
புல்லன்மனம் அவித்யா              ரூபம் நல்ல (ஆதி)

2. பெண்டுபிள்ளைகள்              சமுசாரம் முதற்
பேசும்லௌகிக              வியாபாரம் தன்னில்
மண்டுமேமோகாந்த              காரம் துயர்
மாற்றியருள்வை              நிர்விகாரம் நல்ல (ஆதி)

3. பாவக்கடல்கடக்குங் கலமே தொண்டப்
பயிர்கள்வளருந்தெய்வ நிலமே கன
நாவலர்போற்றிடும் நிர்மலமே வேத
நாயகனுனு் அடைக்கலமே (ஆதி)

---

54-இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும்

அநுபல்லவி

சுந்தரமாகத் துலங்குந்தெய்விகனே
சந்ததமும்புவி தாங்கும்நிர்வாகனே (இந்த)

சரணங்கள்.

1. காமிகநிமித்தங் கலங்கி நையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான்தொண்டு செய்யாமல்
மாயாப்பிரபஞ்சத்தில் மாட்டி வையாமல்
மாதர்கண்ணம்பென் மனதில் தையாமல் (இந்த)

2. எங்கெங்குமேஉன்னுருவாய் மின்ன
எண்ணம்வேறின்றிஉனைமன் முன்ன
மங்களநாமமென் வாய்நிதம் பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய் மன்ன (இந்த)

. சுத்தசைதன்னிய நிலைமையில் சார
தோஷகர்மானுபந் தங்களுந் தீர
அத்தனேநித்த முனக்கன்பு கூர
ஆனந்தவீட்டிலே நான்வந்து சேர (இந்த)

சூதுபொறாமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபந்துன் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலகில்லாமல்
வேதநாயக விளம்பஞ்சொல்லாமல் (இந்த

55-இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி

ஏகபராபரனே-கருணைப்பிர
வாகமனோகரனே

அநுபல்லவி.

தேகமுறும்பல மோகஉபாதிகள்
ஏகஎனக்கு விவேகமருள்தருள் (ஏக)

சரணங்கள்.

1. சஞ்சலமானேனே-மனம்நொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலென்நத்தானே-அடியேனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிரபஞ்சமெலாஞ்செய்து
தஞ்சம்செய்யும்நிஷ்பிர பஞ்சபொருளான (ஏக)

2. சங்கடமாற்றுயோ-எளியேன்
தன்முனந்தோற்றுயோ
இங்கிதஞ்சாற்றுயோ-தமியனை
யேகரையேற்றுயோ
அங்குமிங்கும்புவி-எங்குமுயிரெனத்
தங்கும்படியருள்-பொங்குங்குணாகர (ஏக)

3. நேபர்சகாயனே-அருமறை
நீதிசொல்வாயனே
தூயதியாகனே-அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயாவியாதி-நோயணுகாமலே
தாயெனவேவேத நாயகனே ஆளும் (ஏக)

---

56-இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைகடாக்ஷஞ் செய்வாயோ-சுவாமி

அநுபல்லவி

மருணைசயாகவே மகிழ்வாகநீயே (கருணை

1. அபிபாயம் உலகவிர்த்தாந்தம்-இதில்
அறிபாதவண்ணம்நீ அருள்வைஉபசாந்தம்
தனியுடன்றனேறு யேகாந்தம்-சொல்ல
சார்வதாகாலமு மௌனதசித்தாந்தம் (கருணை)

2. நாமரூபகமாம் பிரபஞ்சம்-அன்ம
உண்மையை அறிக்கும் எந்நாளும்இதகஞ்சம்
காமவிஷயாதிகளில் நெஞ்சம்-நாளும்
கலங்கினேனின்பாத கமலமேதஞ்சம் (கருணை)

3. போதாந்தநிலைமை யுறுதேவே-நல்ல
புவனகோடிகள்செய் தளிக்கின்றகோவே
வேதாந்தரச மொழுகுகாவே-நிதம்
வேதநாயகன்இதய வண்டுவளர்பூவே (கருணை)

---

57-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-நல்ல
அற்புதநெற்பதம்பெறப் பொற்பதம் எனக்கருள்செய்

அநுபல்லவி.

ஓதரும்உயிர்க்குயி ரோங்கியெங்குநிறையும்
பூதசராசரப் பொருள்கள்எல்லாம்உறையும் (ஆதி)

சரணங்கள்.

1. ஜீவன்பிழைக்கும்வழி அறியேனே-நல்ல
தெற்குவடக்கறியாச் சிறியேனே
பாவவிரிகொண்ட வெறியேனே-பந்த
பாசக்களைவெட்டி எறியேனே
ஆவனுடனேஎங்கும் அலைந்தகம்வெம்பினேன்
வேதநாயகனே உன் திருவடிநம்பினேன் (ஆதி)

2. ஐயனேஎனக்கருள் ஊட்டாயோ-கெட்ட
அகங்காரமெனும்பேயை ஓட்டாயோ
உய்யவழியெனக்குக் காட்டாயோ-எந்தன்
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவாடினேன் (ஆதி)

3. அடங்கலும்படைத்தளித் — தழிப்போனே-கணம்
ஆகப்பல்கோடிகாலங் — கழிப்போனே
தொண்டர்மனத்துயரம் — ஒழிப்போனே-நல்ல
சுகமுத்தரோடுகூடிச் — செழிப்போனே
அண்டும்வேதநாயகன் — அகத்தொளிர்ஜோதியே
மண்டும்வினைகளெல்லா — மாற்றுதல்நீதியே (ஆதி)

---

58-இராகம்-பரசு-அடதாளசாப்பு.

பல்லவி.

ஜெகநாதா-வினை-அகலாதா

அநுபல்லவி.

பகலோனென அரும் பலஇருள்நீக்கும் (ஜெக)

சரணங்கள்.

1. பரிதாபம்பரிதாபம் — ஐபாளன்னிலைமை
பஞ்சப்புலாதியர்க் — கார்தந்தார்தலைமை
தரைமிசையென்செய்கை — பாவுமேபுலைமை
தந்தருளினிஞான — சாஸ்திரப்புலமை (ஜெக)

2. அநுகூலசத்துரு — வாகுமென்னுள்ளம்
அநுதினஞ்செய்வதெல்லாம் — பெருக்கள்ளம்
தினமுமேபடித்திடுந் — தீவினைப்பள்ளம்
தீர்த்தெனையாட்டுவை — திருவருள்வெள்ளம் (ஜெக)

3. ஈசனே அறநெறி — எனக்கென்றும்விலக்கம்
என்பிழைகளைஎண்ண — இல்லையேஇலக்கம்
கூசினேனான்மிகக் — கொண்டேன்கலக்கம்
குணவேதநாயகா — கொடுத்தருள்துலக்கம் (ஜெக)

---

59-இராகம்-மத்தியமாவதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

இரக்கஞ்செய்வாயோ-ஐபாளன்மேல்

அநுபல்லவி.

இரக்கஞ்செய்வாயோ புரக்கும்எந்தாயோ
ஏகமாகிய-யோகபூரண-பாகமேபெற-மோகமேஅற (இரக்)

1. தேகஸித்தம் — செய்வதனர்த்தம்
ஏகப்பிரசித்தம் — ஏங்கினேன்சித்தம்
இன்பமேவிவ னின்பதாம்புய
அன்புதங்கிட துன்பமங்கிட (இரக்)

2. காரெருமுடன் — நாயினுங்கேடன்
அனர்கள்சேடன் — என்றும்பொய்வேடன்
ஈனமும்அவ மானமுங்கெட
ஞானமுங்கன மோனமுந்தொட (இரக்)

3. உலகவியாபாரம் — ஒபாவிசாரம்
கலகம்அபாரம் — கர்மவிசாரம்
கஷ்டமுங்கெடுக னஷ்டமும்பெற
துஷ்டனெனு சிஷ்டனாகவே (இரக்)

4. தாசர்கள்நேசா — தர்மவிலாசா
பாசவிநாசா — பாக்கியப்பிரதேசா
பாதமேதொழும்வேதநாயகன்
பிதருள்மற வாதநாதனே (இரக்)

---

60-இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பரனேபக்தசுதந்-தரனேநாளும்
பக்ஷம்வைத்தென்னைசம்-ரக்ஷணைசெய்தருள்

சரணங்கள்.

இரவிகோடியென ஒளிவீசிடும்
ஏகஅநேகவைபோகநிர்தேகதந் (பர)

1. உன்னையல்லால்கதி — பின்னையில்லையென்
றுனக்குத்தெரியாத — நாளும்
உற்றதன்பிள்ளையைப் — பெற்றதாய்தள்ளின்
உலகஞ்சிறியாதா — மேகம்
தன்னைப்பயிர்வேண்டி — முன்னே அருமழை
சொரியாதோ — அந்தத்
தன்மைபோல்நீஉயர் — நன்மையுதவிலென்
தாமம் — மரியாதா

இங்கிவமீதினிலென்னைப் போலோர்ஜடன்
இல்லையேபைங்கிளிச் சொல்லையற்றாருடன்
மன்னிமோகக்கடல் தன்னில்விழும்விடன்
மாளுமுன்னாளும் வந்தாளுவதுன்கடன் (பர)

2. நீவிய அண்டங்கள் மேவினகாயத்தில்
நிற்கச்செய்தாய்நீயே எந்தன்
நெஞ்சம்உன் தாளிணைக் கஞ்சம்பதிந்திட
நீவரம் ஈவாயே உனக்
கோவியமோ இது காவியங்கொள்ளரும்
உத்தமஎந்தாயே எனக்
குன்னைத்தருமட்டும் நின்னைஅலட்டா
தொழியுமோ என்வாயே
தீவினைநாசனெனப் புகழ்மாலையே
சேர்ந்தஉனக்கென்ன சார்தர்கண்வேலையே
பட்டேன்பொய்விட்டேன் கும்பிட்டேன்உன்காலையே (பர)

3. நீதகனும்பஞ்ச பூதம்வளர்சர்வ
சாதகபூமியே வினை
தீர்ந்திடவேஞானக் காந்திசொரியுஞ்
சர்வாந்தரியாமியே என்றும்
வேதநாயகன் மீ தருள்மறவாத
ஸ்வாமியே உண்மை
விளங்கவேபல வளங்கள்காரும் நிஷ்
களங்க நேமியே
போதனேநீங்காவென் பாதகவெட்டையே
பொய்யுருவாகிய மெல்லியெனுங்கட்டையே
நாதனேநீங்குமுன் பாதகநிட்டையே
நண்ணிடப்பண்ணுவாய் புண்ணியப்பிரதிஷ்டையே (பர)

---

## 91-இராகம்-யதுகுலகாம்போதி-ஆதிதாளம்

பல்லவி.

இன்னம்பராமுகம்-ஏதோஎந்தன்
முன்னம்வந்தாள-ஒண்ணாதோ

அநுபல்லவி.

தன்னவரைரக்ஷிக்கத் தானேகங்கணமே
தரித்தவனேஎனை ஆதரித்தல்வஞ்சனமே (இன்னம்)

1. யார்க்கோசொல்வதுபோல் நீ அசட்டை-செய்யில்
எப்படித்துலைப்பேன் என்கன்மக்கட்டை
மார்க்கமுடனே நீ மெஞ்ஞானநிஷ்டை-தரும்
மட்டும்நான்விடுவேனோ என் அசட்டை
மூர்க்கவினைகளுக்கு நானொருபையோ
மூடமனமுமாயையும் ஒருகையோ
தீர்க்கமாகஉனைநான் அடுத்ததுபொய்யோ
தெய்வமேநீகைவிடில் என்செய்வேன் ஐயோ (இன்)

2 தீனருக்குதவுவதே தியாகம்-பெருஞ்
செல்வருக்கீவது துர்விநியோகம்
மானமுள்ளோர்க்குன் அருள்பிரவாகம்-பின்னும்
நலம்அவர்க்கிவதில் என்னுபயோகம்
ஈசனுனைஎனக்கு ஞானசையோகம்
ஈவதுவேநல்லதி யாகப்பிரயோகம்
நானுன்சந்ததி அதிலென்னசந்தேகம்
நான்விடேன்விடேன் பூர்வார்ஜிதவாகம் (இன்)

3. பிள்ளைக்கும்தாய்க்கும் உண்டோகணக்கு-மிகப்
பெருகும்உன்கருணைக் குண்டோகணக்கு
சள்ளமயலுறு மென்மனக்குணக்கு
கனங்கொள்நன்மார்க்கத்தில் எனைஇணக்கு
தள்ளரியதாகிய பரமசத்துவமே
சாக்ஷாதுலகெங்கும் விளங்குந்தத்துவமே
விள்ளரிதாகிய சர்வஞ்ஞத்துவமே
வேதநாயகன் தனக்குரியசொத்துவமே (இன்)

---

62-இராகம்-ஸ்ரீராகம்-அடதாளச்சாப்பு.

பல்லவி.

வேதநாயகா-நம்பினேன்-உனை

அநுபல்லவி.

ஏகமும்விபரீதமுங்கெட
நீதமுங்கனபோதமுங்கொடு (வேத)

சரணங்கள்.

1. தினமும்உன்பணி விடையே-நான்மறவாமல்
செயஅருள் நன்னடையே
இனமாகும் அருட்கொடையே-வழங்கிட
எனின்னமுந் தடையே
கனமுமேலவர் இனமும்நிர்மல
மனமுஉண்மை தரிசனமும்மேயருள் (வேத)

2. பொய்வளர்மெய்க் கும்பமே-உடயமுன்
போதிபுண்ணி யாரம்பமே
தெய்வநி ராலம்பமே-ன் கவிகளைச்
செவிகொண்டு சிரக்கம்பமே
செய்குவாயுளம் வைகுவாயருள்
பெய்குவாய்வினை எய்குவாயுயர் (வேத)

3. தயைசெய்யிற் பொல்லாக்கா-எந்தனையாளத்
தாமதஞ்செயல் பாங்கா
பயன்உதவிடில் நீங்கா-வேதநாயகன்
பரவுங்குண தாரங்கா
நயமும்ஆணவ ஜெயமும்நாளும்அ
பயமும்பாதபங்கயமுமேயருள் (வேத)

---

63-இராகம்-ஆகிரி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதனே தயைபுரிவாய்-எனக்குமெய்ப்
போதமா-மழைசொரிவாய்

அநுபல்லவி.

நீதகல்பரம்பர திவ்யகுணடம்பர
ஓதருஞ்சுயம்வர உலகமுடன்அப்பர (நாத)

சரணங்கள்.

1. நண்ணிநல்வினைகளைப் பண்ணியறிகிலாத
நான்நான்போவியா இந்த
மண்ணின்மிசைஎனக்கும் புண்ணியமென்பதற்கும்
மத்தியில்வேலியா எந்தன்
எண்ணமெல்லாங் கறுப்பே
எனக்குன் னடிவெறுப்பே
பண்ணுநீத நீமறுப்பே
புரிந்தாள்வ துன்பொறுப்பே (நாத)

2. என்பாட்டில்இரங்காமல் உன்பாட்டில்நீசும்மா
இருந்திடில்அது தருமா என்றும்
தன்பாட்டில்மகிழ்ந்தோனே இன்பூட்டுங்கதியுந்தன்
தயையின்றிக்கைகூடுமா எந்தன்
அன்பெல்லாம் வெறும்பேச்சே
அறமென்பதுமேற் பூச்சே
துன்பப்பிரளயம் நீச்சே
தொல்புவி எங்கும்வச்சே (நாத)

3. நினையளவும்நன்னெறி தனையறியாதநான்
தீவினைக்கேயிலக்கா பாரில்
வினையன்றிமற்றெதையும் நினையும்என்னெஞ்சுக்கு
நீமாத்திரம்விலக்கா நன்மை
புனையும்நீதிப்பிரமாண
புவனகோடி நிர்மாண
வினயநித்தியகல்யாண
வேதநாயகன்பிராண (நாத)

---

64-இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

தஞ்சம்நீயே-தயைபுரிவாயே-தஞ்சம்

அநுபல்லவி.

அஞ்சலென்றேதினம் ஆளும்எந்தாயே (தஞ்)

சரணங்கள்.

1. தினமனவேதை சேர்ந்தநான்பேதை
உனதடிப்போதை உறஅருள்பாதை (தஞ்)

2. பாதகபஞ்சன பண்டிதரஞ்சன
போதககஞ்சன புண்ணியநிரஞ்சன (தஞ்)

3. தருமசிங்காரா சருவசங்காரா
வரும்வேதநாயகன் மனஅலங்காரா (தஞ்)

65-இராகம்-பரசு-ஆதிதாளம்.

பல்லவி.

நீயேகதிஎனக்குன் அருள்கூரே தந்தை
தாயேநினை அல்லது துணையாயே

அநுபல்லவி.

தூயகருணைமழை சொரிகாரோ
சொலஅரு-நலமுறு- தலமிசை-நிலவென
மலஇருள்-செலஅருள்-அலரும்-உதாரா (நீயே)

சரணங்கள்.

1. முத்திஎன்பதெவர்க்குஞ் சமுதாயம் அது
முத்தர்மட்டுக்கும்என்ப தென்னநாயம்
நித்தியனேவிடுவேனே என்தாயம் நீ
நீதியின்படிசெய்குவாய் விதாயம்
சத்தியனேஏதோ உன் அபிப்பிராயம்

தகவென-தகமிசை-மிகபதி-புகஅரும்
இகபர-சுகமருள்-அகல்ஜகநாதா (நீயே)

2. வாழ்மனைதந்திடில் வேண்டாமே என்று
மாநிலத்துண்டோ மறுப்பவர்தாமே
ஆழுவேனீயெனது மனப்பூமேல் குடி
ஆகிடின்உனக்கென்ன குறைவாமே
சூழநீகுடியுறில் வினைபோமே

துதிபுரி-விதியினர்-சதியெனும்-நிதிபெற
அதிதயை-பதவுறும்-அதிசயயோகா (நீயே)

3. சாகனேஎன்துயர் தெரியாயோ நல்ல
சர்வாந்தர்யாமியெனும் பெரியாயோ
பாதகம்அறஅருள் புரியாயோ பரி
பக்குவஞானமழை சொரியாயோ
வேதநாயகன் மனந்தரியாயோ

மிடலுறு-சுடரவன்-உடுபதி-தடவரை
கடவிட-முடன்இடர்-கெட-அடர்-தேவா. (நீயே)

66- இராகம்-பூபாளம்-ரூபகதாளம்.

பல்லவி.

தேவாதிதேவே திருவருள்
செய்தென்னை-நீகாவே.

அநுபல்லவி.

ஜீவசம்ரக்ஷணை செய்யுங்கிருபாநிதியே
தினந்துஷ்டர்கள் இனஞ்சுட்டலர்
முனஞ்சிஷ்டர்கள் இனஞ்சுட்டமர் (தேவா)

சரணங்கள்.

1. பாழுமனமேசுத்த பாஷாணம்-பெரும்
பாவமென்றால் அதற்குக்கலியாணம்
வாழும்இக்காளொழிந்த நிர்பாணம்-கிட்டி
வருமுன்னம் அருள் புண்ணியப்பிரமாணம்
ஏழையென்செய்கையுன்னிலெனக்குமேவரும்நாணம்

இழைக்குஞ்சுகம் அழைக்குந்தகை
தழைக்கும்படி பிழைக்கும்படி (தேவா)

2. அருள்செய்யின் அலதுன்னைவிடுவேனோ-உனை
அன்றிமற்றோரைக் கும்பிடுவேனோ
மருவுமயலிற்சிக்கிக் கெடுவேனோ-உன்பால்
வழக்கிட்டிறக்கபயப் படுவேனோ
மருள்செயும்பொருளைநீ வழங்கினுந்தொடுவேனோ

மனந்தங்கிடும் அனந்தத்துயர்
முனஞ்சிந்திடு கனந்தங்கிட (தேவா)

3. சிஷ்டபாலகங்கணா தாரணனே-பெரும்
தீயபசாசகண மாரணனே
துஷ்டகண்டன் மந்திரோச்சாரணனே-நாளுஞ்
சுயப்பிரகாச நிஷ்காரணனே
இஷ்டன்வேதநாயகன் ஏதநிவாரணனே

இணங்கண்டர்கள் கணங்கண்டடி
வணங்கும்படி குணங்கொண்டுயர் (தேவா)

67-இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏகாதிபனே-அருள்புரி-யோகாதிகரனே

அநுபல்லவி.

ஆகாமியமுறும் மகாமியம்அறும்
அகனுதகிற்பர அதிகுணதற்பர
இகபரநற்பத இலையறும்அற்புத (ஏகாதி)

சரணங்கள்.

1. பழிக்குநான்குருபீடம் பத்தனைப்போல்நான்
தரிப்பதுவெளிவேடம்
அழிக்கும்பொய்வாய்பாடம் கொடுமோசைக்கென்
அகாம நடனகூடம்
செழிக்கும்வரங்கள் ஈவாய்
சிந்தையிற்குடி யாவாய்
தினகரசுந்தர திருவளர்மந்தர
அனகநிறந்தர அகிலதுரந்தர (ஏகாதி)

2. படியாக்கொடுநெஞ்சமா றுபனேஅது
படருந்துற்குண புஞ்சமா
அடியேன்துயர்கொஞ்சமா வரப்பிரசாதம்
அருள்உனக்குப் பஞ்சமா
படியெல்லாம் ஈன்றதாயே
பாரில்நற்கதி நீயே
பாமபவித்திர பதிசஉபத்திர
தருமசமுத்திர சகலவிசித்திர (ஏகாதி)

3. சுரசேவிதபாதா மலரகித
சுஜநவற்சகலதாதா
வரதாயகநாதா வேதநாயகன்
மனவாலயகியாதா
நரபரிபாலன நயகுணலாலன்
நாகரிகத்துவ நாமமகத்துவ
போகபிரபுத்துவ புண்ணியதத்துவ (ஏகாதி)



68 இராகம் தன்யாசி-ரூபகதாளம்.

பல்லவி.

நிச்சயம் இதுதானே மதி நீபருள்கோனே

அநுபல்லவி.

நச்சுமரம்போல் நாளுநீவளர்த்தேன்
இச்சகந்தனில் இதயநதளர்த்தேன் (நிச்சயம்)

சரணங்கள்.

1. அல்லும்பகலும் பொருளிலாக்கம்
அந்நியசுகங்களோ வயோதுக்கம்
நல்லவர்சபை எனக்குநீக்கம்
ஞானவழியில் நாளுந்தூக்கம் (நிச்சயம்)

2. துஷ்டர்களுடனே அனேயோன்யம்
துர்க்குணமெல்லாம் சர்வமான்யம்
இஷ்டம்வைப்பது வேதனதான்யம்
ஈசனேஎனக் கறிவுசூன்யம் (நிச்சயம்)

3. நிதமும்எனக் குணதுவேதம்
செவிடன்காதில் சங்குநாதம்
வேதநாயகனே உன்பாதம்
விரும்பிவாழ்ந்த லெபிரமாதம் (நிச்சயம்)

---

99 இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

கருணாசாகரா கனஉபகாரா
காத்தருள்வாய்கோவே

அநுபல்லவி.

அருணோதயமென அடியர்க்குக்காட்டும்
ஆத்மகோடிகள் உஜ்ஜீவநஅமுதூட்டும் (கருணா)

சரணங்கள்.

1. நிச்சயஞானமே நினதுஸ்வாதீனம்
நீதாவிடில்எனக் கேதுமெய்ஞ்ஞானம்
அச்சமில்லாமலே அபயப்பிரதானம்
அருள்செய்யேனடியேனுக் கில்லைசமானம் (கருணா)

2. சிஷ்டன்போல்யாவர்க்குந் திவ்வியப்பிரசங்கம்
செய்வதிலேஎனைப் போலெவர்சிங்கம்
சட்டமாய்கடப்பதே சர்வவில்லங்கம்
சாமிநீஅறியாயோ தமியன்அந்தரங்கம் (கருணை)

3. எத்தனையோசெய்வதேன் உனக்கபராதம்
இதுநிமித்தம்உனக் கென்மேல்விரோதம்
அத்தனைபிழைபொறுத் தாள்வதேநீதம்
அருள்புரியஇனி வேண்டாம்விகாதம் (கருணை)

4. தலைவன் இல்லாவிடில் தழைக்குமோராஜ்யம்
தரையிலேநீயல்லால் சகலமும்பூஜ்யம்
விலகிடாகருள்உயிர் விமலசாம்பிராஜ்யம்
வேதநாயகா இன்னந் தானென்னவிபாஜ்யம் (கருணை)

---

70-இராகம்-தோடி-ஏகதாளம்.

பல்லவி.

தயைபுரிய இன்னந்தாமசமோ

அநுபல்லவி.

பயநிவாரணா பாக்கியபூரணா
உயரும்ஆரணா உலககாரணா (தயை)

சரணங்கள்.

1. அத்தனைஒருசா ணாகியகுக்ஷிக்
காகநான் ஊரெல்லாம் அலைந்திடும்பக்ஷி
நித்தமும்பேசுவேன் ஆயிரஞ்சக்ஷி
நீதிநெறியில்லா னிரக்ஷரகுக்ஷி (தயை)

2. தத்துவஞானத்தைத் தள்ளியேபோட்டேன்
சாமிநான் இந்திரிய வாசலைப்பூட்டேன்
உத்தமம்எனக்கருள் பதாரங்கேட்டேன்
உதவிசெய்யாவிடில் உனைவிடமாட்டேன் (தயை)

3. சர்வவினோத விசித்திரநிர்மாணா
சாசுவதமங்கள சத்தகல்யாண
பரமநித்தியானந்த பாக்கியஉக்கிராணா
பாலவேதநாயக பிரமாணா (தயை)

71-இராகம்-முகாரி-ரூபகதாளம்.

பல்லவி.

காத்தருள்வாய்-எனைக் காத்தருள்வாய்.

அநுபல்லவி.

சாஸ்ரம்வேதம் ஸ்தோத்திரமேசெய்யப்
பாத்திரனேதயை நேத்திரனேதயை (காத்தருள்)

சரணங்கள்.

1. ஆறுலும்என்பாபம் அநியாயம்அநியாயம்
ஞானியைப்போல்நான்காட்டும் நடையேமுழுமாயம்
ஈனமுறுந்தமகுணங்கள் எந்தநுக்கேகந்தாயம்
தீனனென்மேல்நீகோபஞ் செய்யிலென்னஆதாயம்(காத்)

2. மாதாநீஉன்மகனுன் மன்னவநீகுடிநானே
தாதாநீயாசகநான் ஸ்வாமிநீஅடியேனே
சாதகஞ்செய்தற்குநீ தமியேன்சிஷன்தானே
ஆதாரமாகஉனை அடுத்துவந்தேன்சுரர்கோனே(காத்)

3. வாக்குமனம்எட்டாத வாசமகோசனே
பாக்கியபலதான பரிபாலபரமேசுரனே
தேக்குமலவிருள்நாசஞ் செயும்உதயபாஸ்சுரனே
ஆக்கும்வேதநாயகனுக் கனுக்கிரகதயாபரனே(காத்)

---

72-இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி.

வாவாஜகநாதா-வாவாஜகநாதா

அநுபல்லவி.

பாவங்களை நிர்மூலமாகப்
பரமாத்தர்கள் கொடுத்துக்காக்க

சரணங்கள்.

1. தர்மாதர்மந் தெரியேன் ஜெப
தபசாதிகள் புரியேன்
கர்மத்அனு சரியேன்
கண்டால்இனிப் புரியேன் (வாவா)

2. வினைநீ விடலாமா பல
இடர்நான் படலாமா
வினையே தொடலாமா ஏழை
வீணே கெடலாமா (வாவா)

3. வர்மஞ்செய்தால் முறையா எந்தன்
வாழ்நாள்வளர பிறை
தர்மந்தரிற் குறையா இன்னஞ்
சலஞ்சாதித்தல் பொறையா (வாவா)

4. லீலாவித முகனே நித்திய
அமலானந்த சுகனே
மேலோர்கள் சமுகனே தவ
மிகும்வேத நாயகனே (வாவா)

---

73-ஞ் ராகம் சஹானா-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைநீசெய்யவேண்டுமேசுவாமி

அநுபல்லவி

சரணாகதியென உனையடைந்தேனே
சாதயவேண்டியே உனைதொடர்ந்தேனே (கருணை)

சரணங்கள்.

1. மாயவாழ்வெனும்பெரு வாரிதிச்சுழலே
மாட்டியேஅலைப்படும் நாளொருவிழலே
காயமாகியசிறு காற்றசைகுழலே
கழியும்போதுநற் கதிமலர்க்கழலே (கருணை)

2. சலத்தையல்லாது தாமரைக்குண்டோநிலையே
தரையில்ஊன்றுப்பயிர் எடுக்குமோதலையை
நிலத்திலேநீயலால் நிலையெனக்கிலையே
நீமுகம்பார்த்தருள் நிரஞ்சனமலையே (கருணை)

3. சந்திரர்சூரியர்உள்ள மட்டும்வாழ்நாளா
சாவையேஜெயித்திட எண்கையில்வாளா
தந்தையேயுனதுசோ தனைக்குநான்ஆளா
சர்வசாதக பரமதயாளா (கருணை)

4. அகணிதகுண அகிலாண்டவிலாசா
அபரிமிதானந்த கரமரமேசா
விகசகிருபாகர விமலப்பிரகாசா
வேதநாயகன் இதயநிவேசா (கருணை)

---

74-இராகம்-ஈசமனோகரி-ரூபகதாளம்

பல்லவி.

அபயம்நீ அருள்வாய்-ஆதியே-அநுதினம்

அநுபல்லவி.

உபயபாதம் நம்பினேன் ஓ அநாதியே அநுதினம்(அபய)

சரணங்கள்.

1. அலைகடற்சிறுதுரும்புபோல அலைந்துவாடினேன்
உலைமெழுகெனஉள்ளமுருகி உன்னைநாடினேன்தினமும் ()

2. நீர்க்குமிழியைநிகரும் வாழ்வைநிலையென்றெண்ணினேன்
மூர்க்கமாகக்கொடிய பாவமுழுதும்பண்ணினேன் தினமும் ()

3. பாசக்காற்றிற்பஞ்சுபோலப் பறந்துதயங்கினேன்
ஆசைக்கடலில்மூழ்கிமூழ்கி அறிவுமயங்கினேன் தினமும் ()

4. ஆண்டவநீஅடிமைநான் எனை ஆளவொண்ணாதோ
நீண்டவுலகம்ஏழையென்றெனைநிந்தப்பண்ணாதோ தினமும் ()

5. புவனரக்ஷணகாரணார்த்தபுருவேஷனே
பவவிமோசன வேதநாயகபலவிசேஷனே தினமும் (அபய)

---

75-இராகம்-பியாகடை-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோசோதனை-இன்னம்என் சாதனை
ஏகாதிபதியே-நிதியேஎளியன்மேல்

அநுபல்லவி.

போதேயசுர பூஜிதபாதா
பூதபேத காரணசுகதாதா (ஏதோ)

சரணங்கள்

1. தந்தைதாயொடு பலதனையரையெடுத்தாய்
தாரங்கள்மூவர்க்குச் சாசுவதம்கொடுத்தாய்
சொந்தமாகியஉடற் சுகத்தினைக்கொடுத்தாய்
ஸ்சுவாமிநீயிந்த வாறுகைவிடுத்தாய் (ஏதோ)

2. ஒருகையால்அடிப்பாய் ஒருகையாற்பிடிப்பாய்
உதவியில்லாமலே என்னெண்ணமுடிப்பாய்
பெருமலைகளையுமே பிடுங்கிப்பந்தடிப்பாய்
பிரம்மாண்டங்களைப் பிளந்திடஇடிப்பாய் (ஏதோ)

3. துன்பஞ்செய்வதுபோல் சுகங்களைக்கொடுப்பாய்
துஷ்டர்கள்மீதில் எப்போதுங்கையெடுப்பாய்
அன்புள்ளதாயைப்போல் அடியரைஅடுப்பாய்
அவர்களைத்துயரணுகாமலே தடுப்பாய் (ஏதோ)

4. அதுலஅக்ஷயகுரு பரகரவேஷா
அமிர்தவருஷ தல்லியமிருதுபாஷா
விதுரநிர்தோஷ நிர்விகற்பவிசேஷா
வேதநாயகவர் நிதகுணபூஷா (ஏதோ)

---

76-இராகம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி.

ஏதுபராமுகம்-ஏழையென்மீது
ஏகனே-யோகனே-மாகனே-தியாகனே

அநுபல்லவி.

வேதபோதக-அநாதரக்ஷணனே
மோகவாகன தெய்வீகலக்ஷணனே

சரணங்கள்.

1. அநித்தியசுகந்தந்தாய் அதைநான்கேட்டேனோ
ஆனந்தரித்தல் அநுபவிக்கமாட்டேனோ
இனித்தஉன்பாதத்தில் இதயம்நாட்டேனோ
சனமாரம்பையை எதிர்த்துவாட்டேனோ (ஏது)

2. ஐயனே என்னைக் கேளாமல்முன் நீயே
அரியமானிட ஜன்மந்தந்தாயே
வையகமீதுநான் உனக்கொருசேயே
மதியருள்வாய்பெற்று வளர்ந்திடுந்தாயே(ஏது)

3. முந்திநீபலருக்குக் காட்டினுயுனையே
முக்தர்க்குகொடுத்தனை மோக்ஷமாமனையே
பந்தியிலாகுமோ ஓரவஞ்சனையே
பக்ஷமாயெனக்கருள் பரசகந்தனையே(ஏது)

4. அகடனாடகன்சா மர்த்தியப்பிரதாபா
அச்சுகஜநவாற் சல்லியநிஷ்கோபா
சகலசுலக்ஷண தத்துவசொரூபா
தாசன்வேதநாய கன்மனேதீபா(ஏது)



77-இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

ஆரணமயநயபூரணனே
உனதமல அடிசரணம்

அநுபல்லவி

பாரகோரபரி காரகுணகர
விரதீரஉப காரமனேகர(ஆரண)

சரணங்கள்.

1. உனைநிதம்நினையுறும்எனை அடர்வினை அகலாதா-நாதா
உலககலகமயல்விலக இலகருளேநீதா
கனஉலகஜநக அநக திகரமெய்
காவலா-அடியர்-ஆவலாயருள்செய் (ஆரண)

2. துரிதரஹிதகுண . சரிதசுகிர்தபுரமேசா-நேசா
சுஜனபஜனமிர்து வசனரசன இதிகாசா
சரதவரத அனவரதவிரததர
சாபமோசனபிர-தாபவிலாசன (ஆரண)

3. கனககனபுவன . பவனகவனபரிபாலா-மூலா
கரணசரணகுண கிரணபரண அநுகூலா
விநயவிலயஸ்வயவிஜயமய அபய
வேதநாயகன்மனேதய அதிசய (ஆரண)



78-இராகம்-ரீதிகௌளை-ரூபகதாளம்.

பல்லவி.

சரணஞ்சர்வேசா-அனேரக்ஷிக்கத்
தருணமிதுபிரகாசா

அநுபல்லவி.

கருணாலயபரகாயப்பிரவேசா
பரமசுகோதயபாபவிநாசா (சரணஞ்)

சரணங்கள்.

1. நீயேகுருமூர்த்திஉனக்குச்சிறு
நாயேன்விர்த்தியாத்தி

தூயாஉபதேசஞ் சொல்லிஇஷ்டபூர்த்தி
ஈயிற்குருசிஷர் இருவர்க்குங்கீர்த்தி(சரண)

2. நீதான்பரஞ்சோதி-எனஉலகின்
மீதேபெருங்கியாதி

வேதாமலவிருள்விலக்குதல்நீதி
ஆதாரமாகஎன்னருளைப்பிரசாதி (சரணஞ்)

3. ஆதிகாரண நாதாபரமஞான
ஜோதிமய அபேதா

பாக்கமோசனபாக்கியப்பிரசாதா
நீதவேதநாயகநித்தியசங்கீதா (சரணஞ்)

---

79-இராகம்-லலிதா-ரூபகதாளம்.

பல்லவி

இன்னந்தாமசம்ஏது-ஜகநாதா

அநுபல்லவி.

நன்னயமதாக-உனை-நம்பினவனுன் அலவோ (இன்னந்)

சரணங்கள்.

1. சிலம்அருளிற் செலவோ
சேயுனக்குநான் அலவோ
மேலுமென்னதான் சொலவோ
வேலையுனக்குப் பலவோ(இன்னந்)

2. சாதுஜன ரக்ஷணனே
தாசர்கள்பிர தக்ஷணனே
கீதாமிர்த பக்ஷணனே
கீர்த்திகொள் சுலக்ஷணனே (இன்னம்)

3. ஈசனேநான் உன்னடிமை
எப்பொருளும் உன்னுடைய
நேசமுடன் என்மடமை
நீக்கிடுவ துன்கடமை (இன்னம்)

4. சாதக குணபரணு
சர்வபுவ நாதரணு
வேதநாயகன் ஸ்மரணு
வேகதுரி தஹரணு (இன்னம்)



40-இராகம்-கெங்காதரங்கனி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைநானே தொழுவரம் அருள்கோனே
விநயசுஜன சேவிதபெருமானே

அநுபல்லவி.

வேதமுடிவில்நடனம்புரிவோனே (உன்னை)

சரணங்கள்.

1. சிந்தைமீதுனது பாதமேதியானம்
செய்யநீயருள்வாய் திவ்யஞானம்
தந்தைநீயறியுமே சமஸ்தானம்
தநயன்மீதில்லையோ அபிமானம் (உன்னை)

2. ஈசனேஎனது வார்த்தைகள்பொய்யே
இந்தவார்த்தையொன்று மாத்திரமெய்யே
பாசமூடுமெனம் வெயிலுறுநெய்யே
பாவம்நீங்கும்படி தயைசெய்யே (உன்னை)

3. அடருமலசாதிகள் நிறையேழை
ஆனமாயஉட லாகியபாழை
திடமென்றெண்ணிநிறைப்பேன் அதிற்கூழை
இனஞ்செய்யாதேநான் மிகவுழை (உன்னை)

4. சகலலோகம் அடங்காதுயர்காத்ரா
சயமிலாக்கபட நாடகசூத்ரா
சுகப்பிரதாயக கிருபாகரநேத்ரா
துதிவேதநாயகன் மனஜேஷத்ரா (உனை)

---

81-இராகம்-பூரிகல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

கருணாகரமூர்த்தி-காப்பதுவேகீர்த்தி.

அநுபல்லவி.

அருணோதயமாசரீர
அற்புதநராவதார (கரு)

சரணங்கள்.

1. தேகம்வளர்ப்பதே என்விர்த்தி
தினந்துர்க்குணமே பிரவர்த்தி
ஏகமான சக்கரவர்த்தி
எனக்குநீஅருள் பாபநிவர்த்தி (கரு)

2. அற்பமானபோக போக்கியம்
அழிந்துபோம் இதுவேதவாக்கியம்
தற்பராநினைக்கானும் பாக்கியம்
தந்திடில்அதுசர்வ சிலாக்கியம் (கரு)

3. பாதகந்தனைச்சர்வ நாசம்
பண்ணுவதில்உண்டோ பிரயாசம்
வேதநாயகர் நின்னேசம்
விளங்கிடஅருள்வாய் பிரகாசம் (கரு)

---

82-இராகம்-பரசு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்எப்படியோ ஐயாநின் சித்தம்எப்படியோ

அநுபல்லவி.

உத்தமனாகஎன்னை உயர்த்திடுவாயோ
கர்த்தனே நீயென்னைக் கைவிடுவாயோ (சித்)

1. அருள்புரிவாயே அருந்தவப்
பொருள்சொரிவாயே
தருமவாளும்படி தான்தெரிவாயோ
இருள்மூடும்பாவியென் றெனைப்பிரிவாயோ (சித்)

2. பாதஞ்சேர்ப்பாயோ எந்தன்மனக்
கேதந்தீர்ப்பாயோ
ஆதன்செய்வினை அடியோடேபேர்ப்பாயோ
ஏதுங்கதியில்லானென் றிரங்கிப்பார்ப்பாயோ (சித்)

3. வாடிநொந்தேனே மெய்ஞ்ஞானக்கண்
மூடிநைந்தேனே
நாடியாள்வாயென்று நம்பிவந்தேனே
பாடும்வேதநாயகன் பருகுஞ்செந்தேனே (சித்)

---

83-இராகம்-சஹானா-அடதாளசாப்பு.

பல்லவி

எப்படியும்பரமே நலம்பெற
ஈந்தருள்வாய்வரமே.

அநுபல்லவி.

செப்பருமாணிக்கதீபசொரூபனே
தேவேமனமேநொந்தேன்-காவேயெனவேவந்தேன் (எப்)

சரணங்கள்.

1. கேவலம்வாடினேன்கேள்விமுறையில்லையோ என்தன்
சீவன்பிழைக்கச்செய்ப வல்லனீயல்லையோ
பாவனாளனைப் பண்ணுதல்பாரமோ
பாகேகனியேசத்தே ஒகோதனியேவித்தே(எப்)

2. அற்பன்ஆனாலும் அன்னைக்குப்பிள்ளையல்லவோ
பற்பலவாய்படித்து படித்துச்சொல்லவோ
கற்பகோடிகாலங் கண்டுமுடிவில்லாக்
கண்ணேமணியேபொன்னே விண்ணேஅணியேசொன்னேன்

ம

3. இன்பதுன்பங்கள் இரண்டிற்சமித்தமே-தந்து
நின்பதசேவைநிலைக்கச் செய்வாய்நித்தமே
அன்பன்வேதநாயகன் அகத்தேயணி
ஆணிப்பொருளேமுத்தே காணப்பெறுவோர்சொத்தே(எப்)

---

84. இராகம்-கல்யாணி. அடதாளசாப்பு.

பல்லவி.

உன்னையெனக்குக்காட்டையா-காட்டாமல்சும்மா
ஒளித்தென்னவிளையாட்டையா.

அநுபல்லவி.

தன்னைப்பாராமலே தன்பிள்ளைகண்மூடி
தனைப்ஊட்டுந்தாயுண்டோ சாமிநீதயைக்கூடி (உன்னை)

சரணங்கள்.

1. கறவைதனைப்பிரிந்த கன்றுகதறல்போலும்
கணவன்தனைப்பிரிந்து கலங்கும்உத்தமிபோலும்
இறகுகள்பறிகொடுத் தேங்கும்பறவைபோலும்
இருகண்ணுந்தெரியாத எனக்குருடர்போலும்
ஏங்கினேன்சுகம்-நீங்கினேன்துயர்
தாங்கினேன்மனம் வீங்கினேன்-நீ (உன்னை)

2. நினைக்கநினைக்களந்த நெஞ்சமெல்லாம்ருசிக்கும்
நின்னைப்புகழும்வாயே நித்தியாமிர்தம்புசிக்கும்
கலக்கும்நின்னடிகாணக் கண்கள்தினம்பசிக்கும்
கர்த்தனேஉனைக்கண்டாற் கவலையெல்லாம்நசிக்கும்
கனத்திலேனுங்க-னத்திலேனுமென்
மனத்திலேனும்சொப் பனத்திலேனும்-நீ (உன்னை)

3. விண்ணேநினையல்லாமல் வேறொன்றைத்தொடுவேனோ
மேதினியெங்குந்தேடி வேதனைபடுவேனோ
கண்ணேமணியேநினைக் கண்டால்நான்விடுவேனோ
கட்டிக்கொண்டாநந்தங் கலக்கப்பின்னிடுவேனோ
கருத்தில்மூடுவன்-வருத்தம்போடுவன்
நிருத்தமாடுவன்-விருத்தம்பாடுவன்

4. தேவனேஉனைக்கண்டால் திட்டிதோஷந்தொடுமோ
திவ்யதேஜோமயம் என்தேகந்தனைச்சுடுமோ
கூவுங்கோழி பிடித்தால் குஞ்சுமுடம்படுமோ
கொல்லுஞ்சிங்கமானாலும் குட்டிகள் அஞ்சிடுமோ
கோலனே அநு-கூலனே பரி
பாலனே கன-ஞாலனே நீ (உன்னை)

5. ஆணல்லபெண்ணல்ல ஐம்பூதஞ்சுடரல்ல
அரியயன்சிவனல்ல அதுவல்ல இதுவல்ல
காணருமுன் திவ்ய காந்திவிரியுமல்ல
கனவடிவினைக்காணக் காதல்கொண்டேன்வல்ல
காரணசுக-பூரணகுண
தாரணகன-ஆரணனே நீ (உன்னை)

6. தேனேகனியேதெவிட் டாததெள்ளமிர்தமே
சீனியேகரும்பே தித்திக்கும்இரதமே
வானபுவியேசுக வாழ்வேபெரும்பதமே
மதிக்கும்வேதநாயகன் மகிழுமனோரதமே
வாடினேன்கவி-பாடினேன்உனை
நாடினேன்தினந்-தேடினேன் நீ (உன்னை)

---

85-இராகம்-பங்களா-ஆதிதாளம்.

பல்லவி.

சஞ்சலமாய்நெஞ்சமிக உடைந்தேனே-இனித்
தஞ்சமெனஉன்சரணம் அடைந்தேனே-ஸ்வாமி.

அநுபல்லவி.

வஞ்சகப்பிர பஞ்சமெனும்
நஞ்சநதிமுழ்கியே (சஞ்)

1. இட்டவலைபட்டயரும் மான்போலே வெயில்
சுட்டசலம்விட்டகலும் மீன்போலே ஸ்வாமி (சஞ்)

2. பொய்யுலகைமெய்யெனவே தடுமாறி நானும்
ஐயகோகோமையலெனுங் கடுமீறி ஸ்வாமி (சஞ்)

3. கொட்டுமத்திற்பட்டுடையுந் தயிர்போலே சலத்
தட்டுவரக்கெட்டு வரும்பயிர்போலே ஸ்வாமி (சஞ்)
4. பாய்புலியின்வாயில் உறுபசுப்போலே பெற்ற
தாய்கரம்விட்டே அலறுஞ்சிசுபோலே ஸ்வாமி (சஞ்)
5. ஈயவேசகாயமொன்றுங் கிடையாதோ நல்ல
தூயமனம்நீயருளத் தடையேதோ ஸ்வாமி (சஞ்)
6. மாயமலநோயகலும் விசுவேசா வேத
நாயகனன்னேயமனக் குகைவாசா ஸ்வாமி (சஞ்)



86-இராகம்-சுத்தசாவேரி-ரூபகதாளம்.

தருணந்தருணந் தயைசெய்வாயையா-ஓ
தேவதேவா.

அநுபல்லவி.

ஒருவனே ஐன்மலய அபாவா
ஓஓமகானுபாவா (தருணம்)

சரணங்கள்.

1. சித்திரஞ்சேற்றில் நட்டகம்பம்
ஜெகத்தில்இதற்குத் தினமும்கம்பம்
நித்தங்கவலை நிறைந்தகும்பம்
நீயேஇனியெனக் கவலம்பம் (தருணம)
2. சோதனைக்குநான் பாத்திரவானோ
துன்பமூட்டை சுமக்கநானோ
சாதகஞ்செய்யிற் பழுதுதானோ
தள்ளினுலும்நான் போவேனே (தருணம்)
3. வயிறுவளர்ப்பதே என்வேலை
மற்றநேரம் விஷயலீலை
உயிருக்குயிரே ஞானப்பாலை
ஊட்டுவாய்தொழுதேன் உன்காலை (தருணம்)
4. சப்தஸ்பரிச ரசசுகந்தா
தர்மரூபபிர் மாநந்தா
வித்தகசுஐ நானுபந்தா
வேதநாயகம் பிரபந்தா (தருணம்



87-இராகம்-தேவமனோஹரி-ஏகதாளம்.

பல்லவி.

இன்னமும்தாமமேன்-என்ஸ்வாமி (இன்ன)

அநுபல்லவி

உன்னதமாகிய துரியாதீதா
உலகாதிசர்வகாரணபூதா

சரணங்கள்.

1. மழைமுகங்காணுப் பயிர்போல்வாடி
மாதைதனைவிட்ட சேய்போலாடி
தழையும்உன்குணசரித் திரந்தனைப்பாடி
சாமிநானுனை யடைந்தேன்கதிதேடி (இன்னம்)

2. பத்தனைப்போலநான் பாடுவேன்வெளிச்சம்
பாவத்தின்கடலுக்கு நானொருமச்சம
அத்தனேமுனியாதே கொண்டேன் அச்சம்
அருவினைபோக்கி நீயருள்வாய்ஸ்வச்சம்(இன்னம்)

3. அரசேநீயெனைக் கைவிடலாமா
அருளேசெயில்உன்கைப் பொருளேபோமா
திருவரமசுயா விடில்வினைசாமா
தேவமனோகர திவ்யசோமா (இன்னம்)

4. அனவரதசுகிர்த ஆத்மசொரூபா
அனந்தகல்யாணகுண அனகப்பிரதாபா
தினகரதினகர ஞாகியதீபா
சிறியன்வேதநாயகன் இதயசல்லாபா (இன்னம்)



88-இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைத்தவிரவேறெனைத்தாங்கிடப்
பின்னைத்துணையில்லைமன்னர்க்கரசே. (உன்னை)

அன்னைக்கிணையாகியகனபிரபுவே
உன்னற்கரிதாகியமாவிபுவே. (உன்னை)

சரணங்கள்.

1. நீமுகம்பார்த்திடில் அணுவும்பர்வதமே
நீமுனிந்தால் பெருமலைகளும்அதமே
தாமதம்நீசெயிற் பிழைப்பதெவ்விதமே
தயைநீபுரிய இச்சமயம்உசிதமே (உன்னை)

2. நீரைஅடுத்தவர்க் குண்டோஜலகஷ்டம்
நின்னையடுத்தவர்க் குண்டோநஷ்டம்
ஆரையடுக்கினும் உண்டோஅதிஷ்டம்
ஐயாநினக்கன்பனுக் என்னிஷ்டம் (உன்னை)

3. ஊரார்மெச்சிடப் பாடுவேன்பாட்டு
உன்புகழ்பாடவென்றால் வாய்ப்பூட்டு
சீராகியபெரியோர் சபைநீட்டு
தீயோருடன் எனக்கனுதினங்கூட்டு (உன்னை)

4. ஆதிமத்தியானந்த அபாவப்பிரகாரா
அண்டசராசர அகிலாதாரா
பூதநிர்மாண நிர்வாகசங்காரா
போதவேதநாயக புண்யசரீரா (உன்னை)

---

89-இராகம்-சுத்தசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நானேஉனைநம்பினேன்-நலம்
தானேயருள்கனவானே (நானே)

அநுபல்லவி.

வானேஎனச்சுகத்தேனேபொழிந்திடும்
மன்னுபிர-சன்னுதினம் என்னுவுறும்-முன்னுதினம் (நா)

சரணங்கள்.

1. காயம்பலதுவாரக் கந்தல்அதைக்
காக்கநான்போடுவேன் வாய்ப்பந்தல்
மாயவலையிற்பட்டு மதியும்விதியும்கெட்டு
மண்டுவினை-கொண்டுமிக-அண்டுதுய-ருண்டுதினம் (நா)

2. அருணகோடிப் பிரகாசகாத்திரா அதி
அற்புதவேதாகம சாஸ்திரா
கருணனந்தநேத்திரா கனபக்தஜனஸ்தோத்திரா
காப்பாய்முகம்-பார்ப்பாய்-வினை தீர்ப்பாய் அடிசேர்ப்பாய்நிதம்

3. விபுதகணவந்திச் சரணநாளும்
வேதநாயகன் அந்தக்கரண
சுபமங்களதரண சுஜனகுலாதரண
தூயாகன-நேயாபுவித்-தாயான-சகாயாநிதம். (நானே)

---

90-இராகம்-சஹானு-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவேளை-வந்துன்-அருள்-தந்தருள்வாய். (இந்த)

அநுபல்லவி.

வந்தனை நிரந்தரம் புரிந்தேன் ஐயனே. (இந்த)

சரணங்கள்.

1. அன்னைபிதாஉன்னையன்றிப் பின்னையாரையா
என்னைநிதந்தின்னும்வினை தன்னைத்தீரையா
மின்னுகின்றடோன்னுலகந் தனில்வாழ்மெய்யா (இந்த)

2. பூதலத்தில்ஆகரவுன்பாத இணையே
பேதகமாயேதுனக்கிங்கோத இணையே
தீதகலுஞ்சாதகர்க்கபேத துணையே (இந்த)

3. தீயநெஞ்சில்தூயஅறந்தோய இலையே
மாயையெனும்பேய்செய் அநியாயமலையே
நேயன்வேதநாயகனுக்காய நிலையே(இந்த)

---

91-இராகம்-சாமந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மெய்ஞ்ஞானங்கொடுப்பாய்-ஸ்வாமி
அஞ்ஞானந்தடுப்பாய்-ஸ்வாமி. (மெய்ஞ்)

அநுபல்லவி.

பொய்ஞ்ஞானியர் அல்லார்மேற்கருணை
பூண்டவனே என்ஆண்டவனேநீ. (மெய்ஞ்)

சரணங்கள்.

1. ஆஸ்திகள்பாஸ்திகள் யாவையும்வேண்டேன்
அநித்தியப்பொருள் நீஅருளினுந்தீண்டேன்
சாஸ்திரஞ்சொல்லும் வழிஇனித்தாண்டேன்
தருவெனநீண்டேன் திருவடிபூண்டேன் (மெய்ஞ்)

2. அகமேகட்டுக் கடங்காக்காளை
ஐயோவினை அழித்ததுநாளை
இகமேலேநம்பினேன் மலர்த்தாளை
என்னவேநாயோ இதுநல்லவேளை (மெய்ஞ்)

3. அந்நியர்க்குரைப்பேனுன் உபதேசம்
அடியேன்செய்கைகளே ஆபாசம்
என்னசொல்வேன்என் இதயப்பசாசம்
இதற்குன்மேல்நேசம் இல்லைலவலேசம் (மெய்ஞ்)

4. அத்தனேஎளியர்க் கன்னமுமூட்டேன்
அறுத்தகைக்குச் சுண்ணாம்புமேநீட்டேன்
உத்தமமார்க்கத்தில் உள்ளத்தைநாட்டேன்
உனைவரங்கேட்டேன் இனிவிடமாட்டேன் (மெய்ஞ்)

5. அவன்அவள்அதுவென அடங்காமூலா
அகண்டாதீத அபேதவிசாலா
சிவமுறவேதநாயகன் அநுகூலா
ஜெகபரிபாலா சுகமுறுசீலா (மெய்ஞ்)

——()——

92-இராகம்-பரசு-தாளம்-ஆதி.

பல்லவி.

தேவாதிதேவபல-ஜீவாதிகாரணு-உன்
சேவடியை-நம்பினேனே-ஓ (தேவா)

அநுபல்லவி.

நாவாரநானேபல தேவாரம்பாடவே
நாதா-வரம்-நீதா-கண (தேவா)

சரணங்கள்.

1. அக இருள்மூடினேன் மிகமிகவாடினேன்
அஞ்சாதேயென்றுசொல்லி ஆளொண்ணுதோ
இகபரம்நாடினேன் சுகநிலைதேடினேன்
என்மேல் இரக்கம் உனக்கேனண்ணுதோ
பகவானேநீயெனது முகம்நோக்கியேதயை
பண்ணியருள் புண்ணியர்தொழும். (தேவாதி)

2. அன்னையும்பிதாவும்நீ ஆவியும்வுடலும்நீ
ஆசாரியன்கடவுள் யாவும்நீயே
முன்னும்நீபின்னும்நீ முத்திநீசித்திநீ
மூலாதிகாரணமும் மூர்த்திநீயே
நின்னேசவாரியில் நான்என்னேரமும்படிய
நித்தியம்பல சித்தியருள். (தேவாதி)

3. ஏழைநான் அல்லவோ என்னதான்சொல்லவோ
ஈசா என்மீது தயை எண்ணுவாயே
பாழுடலைநம்பினேன் தாழுமனம்வெம்பினேன்
பாசாந்தகாரம் அறப்பண்ணுவாயே
சூழும் அடியார்கள்மனம் வாழும்வேதநாயகா
சத்தமுறு சித்தம் அருள். (தேவாதி)

---

93-இராகம்-பலஹம்சா-ஆதிதாளம்.

பல்லவி.

ஞானமார்க்கம் நானேசேர
நல்வரம் அருளையனே

அநுபல்லவி.

ஈன அசேதன இருள்வழிநீங்கத்
தானமுமோனமுந் தர்மமும்ஓங்க (ஞான)

சரணங்கள்.

1. நீசனுனும் உன்தாச னன் அலவோ
நின்னை அல்லால்தெய்வம் இன்னமும்பலவோ
ஈசனே என்குறை எவரிடஞ்சொல்லவோ
என்மொழிகாட்டிலே எரித்திடுநிலவோ (ஞான)

2. கர்த்தனே ஒழியாக் கவலைப்பிரபஞ்சம்
கண்ணியிற்பறவைபோற் கலங்கினேன்நெஞ்சம்
உத்தமகுணந்தர உனக்குண்டோபஞ்சம்
உன்னையல்லால் இனி வேறில்லை தஞ்சம் (ஞான)

3. அமரர்நரர்சோபன அமிர்தபக்ஷணனே
அனந்தபேதக ஜீவாத்மரக்ஷணனே
சமரஞானசற் குணசுலக்ஷணனே
தாசன்வேதநாயகன் பிரதக்ஷணனே (ஞான)

---

94-இராகம்-சஹானு-ரூபகதாளம்.

பல்லவி.

உதவிசெய்யலாகாதா-ஓ-ஜகநாதா (உதவி)

அநுபல்லவி.

நிதநிதம் உன் நிணையடிகளை
நெஞ்சில்நினைத்திட வரம்நீ (உதவி)

சரணங்கள்.

1. அடியேன் துயர் படவேதகுமா
சுடர்முன் இருள் தானேபுகுமா
கொடிதாகிய வினையால்நிலை
குலைந்தேன்-மனம்-மலைந்தேன் (உதவி)

2. மனைவாழ்வுறு துயர்தான்பலையே
உனையல்லது கதிவேறிலையே
அனையேகொடு வினையால்மனம்
அயர்ந்தேன்-தினம்-பயந்தேன் (உதவி)

3. சுரசேவித பரமேசுரனே
நரபோஷக கருணாகரனே
வரவேத நாயகனேகுண
வரனே-பரம்-பரனே (உதவி)

95-இராகம்-சாளங்கபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைமறவாமல்-எனக்கருள்வரமே
பரம-சுபகரமே (உன்னை)

அநுபல்லவி.

பொன்னைநாடெளியர்போலும் எக்காலும்
அன்னைதன்னைமறவாப் பிள்ளைபோலும் (உன்னை)

சரணங்கள்.

1. மங்களமாகப் பெருவாழ்வுவந்தாலும்
சங்கடமுடன்கன தாழ்வுவந்தாலும் (உன்னை)
2. பூமண்டலம் எங்கும் புகழ்ச்சிவந்தாலும்
ஈமங்கொள்மாலையென்ன இகழ்ச்சிவந்தாலும் (உன்னை)
3. மகிழ்வுறவேவெகு மானம்வந்தாலும்
இகழ்வுறவேகன ஈனம்வந்தாலும் (உன்னை)
4. தலைகீழாக இத்தரைபுரண்டாலும்
அலைகடல்பெயர்ந்த தன்கரைபுரண்டாலும் (உன்னை)
5. அருமையாகிய சதானந்தநிலையே
மருவும்வேதநாயகன் மகிழ்கலையே (உன்னை)



96-இராகம்-கண்டா-ஆதிதாளம்.

பல்லவி.

வாவாவாதேவே-வந்தெனைக்
காவாயோகோவே (வாவா)

அநுபல்லவி.

காவார்பூவே கலையோர்பாவே
ஓ ஓ வேதாவே (வாவா)

சரணங்கள்.

1. வனவேடன்வலையே-மாட்டி-மனநோயுறுங்கலையே
எனவேதுயர் அலையே-சார்ந்த என்-இடர்யாவையுந்தொலையே
வனமார்நிலையே மதியோர்கலையே
கனமார்குணமலையே (வாவா)

2. உடலில்விழுந்திடுமுனமே-பரனே-உனேயே அநுதினமே
திடமா என்மனமே-நினேந்தறம்-செயவே அருள்கனமே
அடியார்தனமே அயலார்சினமே
யடியார்தமக்கினமே (வாவா)

3. நினேயா என்மதியே-உலகில்-நிதமும்செயும்சதியே
வினேதீர் இதுதகியே-பரவும்-வேதநாயகன்கதியே
அனேவோர்திதியே அருள்வாரிதியே
தனேநேர்பரகதியே (வாவா)



97-இராகம்-உசேனி-ஏகதாளம்.

பல்லவி.

தருணம்-ஈதையா-இக்கால-ஹரணம்-ஏதையா

அநுபல்லவி.

கருணையால் உலகனேத்துந் தாங்குபகாரா - தீரா-உதாரா
காணும்பிரபஞ்சம் தனிற்சிக்கிக்
கோணும் என்னெஞ்சம் அநுதினம்
பேணும்பொய்வஞ்சம் இனி உந்தன்
மாணடிதஞ்சம் எனேத்தொடர்
கருமந்தனேயேநீக்க தருமந்தனேநிலேயாக்க (தருணம்)

சரணங்கள்.

1. ஆண்டான் அடிமையை வேண்டாமெனத்தள்ளின்
ஐயாபுகலினி ஏது-மிக
நீண்டநின்கால்களேப் பூண்டுகொண்டேன்விடேன்
நீ எங்கினிச்செல்வதோது - சற்றும்
தீண்டாதெனேத்தள்ளினும் விடுவேனே
திருவே-தருவே-குருவே
தீனன் என்மீது நினதபி
மானம்விடாது தினமதி
யீனன்செய்தீது தொலேயமெய்ஞ்
ஞானம்நீ ஒது பழுதறு
சித்தத்தமரும்கோவே கர்த்தத்துவமுறுதேவே

2. நீயெனைநீங்கிடில் எங்கும்உள்ளோனெனும்
நின்பெயர்க்குக் குறைவாமே-அழுஞ்
சேயர்தமக்கமு தியாதிருப்பாரோ
சிறந்தஅன்னையர்தாமே-வரம்
ஆயிரந்தரங் கேட்டுக்கொடாயிது
அழகா-குழகா-பழகா
தற்றபொன்போலே நடையின்றி
முற்றமென்மேலே பலகலை
கற்றும்பொய்யாலே கொண்டேன்எந்தன்
சிற்றறிவாலே எனைநிதம்
ஆளாய்பலபுவிநாதா மாளாநலமுறுநீதா (தருணம்)

3. எத்தனைசொல்லினுஞ் சித்தம்நன்மார்க்கத்தில்
என்றும்பதிந்திட இல்லை-மிக
இத்தரையெங்கும் பிரசித்தேனேநீசற்
றிளகச்செய்வாயிந்தக் கல்லை-உயர்
வித்தகனே வேதநாயகன் போற்றிடும்
மேதா-நாதா-அபேதா
மின்னும்பிரக்கியாதா அடியன்மேல்
இன்னமும்வாதா எனைஅஞ்சல்
என்னஒண்ணுதா நின்காதில்-என்
சொன்னுழையாதா அநுதினம்
வேதத்தபர்சர்வேசாதீதற்றவர்மணவாசா (தருணம்)

---

98-இராகம்-பூரிகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நம்பினேன்உனையே-தற்காத்தருள்
வெம்பியஎனையே-அநுதினம்-நம்பினேன்

அநுபல்லவி.

அம்புவியெங்கும் நிரம்பும்பலஉயிர்க்
கின்பம்பொழிபுயலே உந்தன்செயலே
உண்டோஅயலே அநுதினம் (நம்பினேன்)

சரணங்கள்.

1. புவனகாரண-பவநிவாரண-நவஉதாரணனே
சம்பூரணனே-மெய்யாரணனே-அநுதினம் (நம்பினேன்)

2. கோரவினைப்பரி-கார அகில்விஷ-தார அதிகாரா
உபகார-அதி தீரா-அனுதினம் (நம்பினேன்)

3. சுகுணசேகர-மிகுமனோகர-சுகிர்தசாகரனே
பராபரனே-தயாபரனே-அநுதினம் (நம்பினேன்)

4. பஜிக்கும்தொண்டர்கள்-புசிக்கப்புசிக்க-ருசிக்கும்
தேன்மயமே-அதிசயமே-அருள்நயமே-அநுதினம் (நம்பினே)

5. வேதநாயகன்-போதமுறப்பிர-சாதம்அருள்பொருளே
மனஇருளே-தொலைத்தருளே-அநுதினம் (நம்பினேன்)

---

66-இராகம்-நாகத்தொனி-திரிசிரம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

தேவாதிதேவனே-ஜீவனேபரபாவனே (தேவாதி)

அநுபல்லவி.

ஜீவாதிகாரனே தீரனே-சூரனே
ஜெகத்திலே மனம்வாடிநொந்தேன்
மகத்துவேஉனைநாடி வந்தேன் (தேவாதி)

சரணங்கள்.

1. எங்கும்நிறையும் எனக்குன்னைக்காட்டாத
ஏதென்னகண் கட்டுமாயமோ
அங்கும்இங்குமே உனைத்தேடி
அலையவைத்தா யிதுஞாயமோ
தங்குபதேசம் செய்யாயின்னம்
தான் அடியேன் சிறுபிராயமோ
எங்குலதெய்வமே தாயேதந்தையே
இதுதான்புத்திர நேயமோ கன (தேவாதி)

2. எத்தனைபிழை செய்தேன்அப்பிழை
எண்ணஉன்னாலும் கூடுமோ
கத்தனேநீயருள் செய்தால்என்னொடு
கருமப்பேய் போராடுமோ
அத்தனேஎன்பால் நீவரில்உந்தன்
அடிகள்வருந்தி வாடுமோ
இத்தலம்நீவரில் மூத்தர்கள்சமுகம்
எங்கேஎன்றுனைத் தேடுமோ-உயர் (தேவாதி)

3. அருளிற்பெரியனீ மருளிற்பெரியனுன்
ஆதரிப்பதுன் பாரமே
பொருளிற்பிரியனை யிருளுக்குரியனைப்
புரிந்தேன் துர் வியாபாரமே
ஒருமைப்படாது மனதுக்கேதினம்
ஊரெல்லாஞ் சஞ்சாரமே
திருளற்புதனே வேதநாயகனே
செய்வாய்நீ உபகாரமே-ஒரு (தேவாதி)

---

100-இராகம்-குந்தவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

நிதம்நிதம்உனையே-தொழுதேனே
பதமலர்-அருள்கோனே (நிதம்)

அநுபல்லவி.

சத்தவைபோகா சகலநிர்வாகா
மதுரப்பிரவாகா வரகுணயோகா (நிதம்)

சரணங்கள்.

1. அறவம்வர இலையே அகம்அறவிலையே
மறம்ஒருமலையே மனமொருசிலையே
புறமயல்வலையே புகுமதிகலையே
துறவறநிலையே துயர்வினைதொலையே (நிதம்)

2. மலம்வளர்தீயே மனமொருபேயே
புலமொருநாயே புலிகொடுமாயே
பலவிதமாயே படர்வுறும்நோயே
தலமிசைநீயே தயைபுரிவாயே (நிதம்)

3. அடியவர்இனமே அருள்மலர்வனமே
கொடியவர்சினமே குறையறுதனமே
முடிவறுதினமே முறையுறுகனமே
அடிதொழும்வேத நாயகன்தரிசனமே (நிதம்)

---

## 101-இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

என்னசொன்னாலும்நீ-இரங்காதிருப்பது
ஏதோகுணக்கடலே

அநுபல்லவி.

உன்னஏகனே உலகநிர்வாகனே (என்ன)

சரணங்கள்.

1. இசசுகம்அநுசிதம் என்பதென் அபிமதம்
தகவுறும்உயர்பதம் தாவெனவேநிதம் (என்ன)
2. இன்னமும்ஏன்சினம் எனக்குநின்தரிசனம்
மன்னஎன்கண்முனம் வாவெனவேதினம் (என்ன)
3. மாயைபடாந்திரம் மாறஒர்தந்திரம்
நீயருட்சுதந்தரம் நீட்டெனநிதந்தரம் (என்ன)
4. உலகவியாபாரமே ஒழியாவிசாரமே
கலகசம்சாரமே கவலைஅபாரமே (என்ன)
5 அருமறைவாசகா அடியர்பிரயோசகா
தருமப்பிரதாளகா தனிவேதநாயகா (என்ன)

## 1^2-இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதா அடியேன்-மீதேன்கோபம் (நாதா)

அநுபல்லவி.

ஆதாரமாகவே அகிலத்தைத்தாங்கும் (நாதா)

சரணங்கள்.

தாரம்சுதர் இல்லாச் சந்நியாசிஎன்றேனோ
சீருரில்லாப் பரதேசிஎன்றேனோ (நாதா)

தந்தைதாயில்லாத தனியர்என்றேனோ
எந்தஉயிரும்பெற்ற இனியர்என்றேனோ (நாதா)

மண்ணும்கைப்பொருள்இல்யிர வறியர்என்றேனோ
சின்னஅணுவும்நுழை சிறியர்என்றேனோ (நாதா)

4. உரிய ஆண்பெண்ணல்லா ஒருத்தர் என்றேனே
விரிபலயுகங்கண்ட விருத்தர் என்றேனே (நாதா)

5. ஆதி அந்தம் இல்லா அநாதி என்றேனே
ஜாதிகுலமில்லா நிர்ஜாதி என்றேனே (நாதா)

6. வீடுவாசல்இல்லாத வெளியர் என்றேனே
ஈடன்னம்துணியில்லா எளியர் என்றேனே (நாதா)

7 மனம்புகுந்தொளிக்கின்ற மாயர் என்றேனே
உனும்நெஞ்சுக்கெட்டா உபாயர் என்றேனே (நாதா)

8. சகல உலகச்சுமை தாங்கி என்றேனே
மிகநரர் அன்புக்கு வீங்கி என்றேனே (நாதா)

9. மற்றோர்கண்ணிற்படாத மாணி என்றேனே
முற்றும்வாய்பேசாத மோனி என்றேனே (நாதா)

10. குணமில்லாக்களேக்காயும் கோபி என்றேனே
அணி அங்கமில்லா அரூபி என்றேனே (நாதா)

11. சீர்பேர் இல்லா அநாம தேயர் என்றேனே
ஆரும்துணை இல்லா அபாயர் என்றேனே (நாதா)

12. மாதின்றி உலகீன்ற மாயம் சொன்னேனே
வேதநாயகா இன்னம் வேறென்சொன்னேனே (நாதா)

---

103-இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைப்போல எனக்குற்றபேர்கள் இந்த
உலகந்தன்னில் உண்டோ

அநுபல்லவி.

அன்னைதந்தைகுருதேவே-இந்த-அகிலகாரணபிதாவே (உன்)

சரணங்கள்.

1. தந்தைதாய்க்கு மனஸ்தாபம் வரில்
சாற்றுவார்கள் பலசாபம் மண்ணில்
எந்தநேரமுமே பாவம் செய்யும்
எனக்குநீசெய்வது லாபம் (உன்)

2. அண்ணன்தம்பிக் குண்டுபோகம் அதை
அடையுமட்டும் அவர் ஸ்நேகம் பின்பு
எண்ணுவார்கள் பல துரோகம் நீ
ஈவைநன்மைகள் அநேகம் (உன்)

3. மனைவிபாலர்க்கன்ன வஸ்திரம் தரும்
மட்டுமே அவர்கள் மித்திரம் பின்பு
நினைவர்செய்வர்பல குத்திரம் என்றும்
நீடும் உன்னருள் சமுத்திரம் (உன்)

4. ஏவல்மன்னர்க்குண்டு திறையே அதை
ஈந்திடாதவர்க்குச் சிறையே உன்னை
மேவினோருக்கில்லை குறையே தொழும்
வேதநாயகன்தன் இறையே (உன்)



104-இராகம்-காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

நாளேநல்லநாள்-புண்ணியம்செய்யும்

அநுபல்லவி.

ஆளும்வேதநாயகன் தாளினைபூசிக்கும் (நாளே)

சரணங்கள்.

1. பாபமில்லாதகால க்ஷேபமும்சுஜனசல்
லாபமுமேபரம லாபமாகக்கொள்ளும் (நாளே)

2. வேதமும்பெரியவர் போதமும்தேவசங்
கீதமும்முதலான நாதங்களுடன்செல்லும் (நாளே)

3. ஞானமும்ஜீவாபி மானமும்பரன்பத
தியானமுமேசெய்து மோனநிலையில்நிற்கும் (நாளே)

4. பத்தினிசுதர்களும் பத்தவர்யாவரும்
சித்தநிர்மலமுடன் பக்திபுரிந்திடும் (நாளே)

5. கூனர்குருடர் அங்க ஈனர்பிணி உடையோர்
தீனர்முதலியோர்க்குத் தானதருமஞ்செய்யும் (நாளே)



## 105-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோ இன்னம்வாதோ இரங்காதோ உன்மனமே

அநுபல்லவி.

வேதவரோதய விமலச்சந்திரோதய
வித்தகநயகுண உத்தமசிரேஷ்டா
பத்தர்கள்பழுதறு சித்த அபீஷ்டா (ஏதோ)

சரணங்கள்.

1. ஐம்புலவேடர்வேட்டை ஆடித்திரியுங்காட்டை
வெம்பாசப்பேய்வாழ்விட்டை விரும்பியேதுன்பமூட்டை
மேவிமனம்அயர்ந்தேன் நிலைமையில்லாப்
பூவின்சுகம்வியந்தேன் அநுதினமும்
பாவவழிநயந்தேன் இனிமேல்வரும்
சாவையெண்ணிப்பயந்தேன் நிரந்தரமும்
தரைமுதலாகயெங்கும் விரியும்சுந்தரமே
அரியகருணைமழை சொரியுங்கந்தரமே (ஏதோ)

2. தீபமனேவியாபாரம் தீர்ந்திடவேஇந்நேரம்
நீயருள்பரிகாரம் நின்பதமேஆதாரம்
நேசஅபிமானம் சற்றும்இல்லாமல்
பேசுவேன்ஞானம் எனக்குலவ
வேசம்அநுஷ்டானம் இலையேஉப
தேசசன்மானம் கொடுத்தருள்செய்
தினமனமகிழ்வுறு கனதிரவியமே
அனவரதமும்ஒளிர் தினகரமயமே (ஏதோ)

3. நீர்க்குமிழியெனவே நிலையாவாழ்வுகனவே
பார்க்குள்உனைவினவே பரிந்தருள்வாய்தனவே
பாசம்குலையாதா எனக்குமோகா
வேசம்கலையாதா உலகம்செய்யும்
மோசம்தொலையாதா உன்மீதுகன
நேசம்நிலையாதா நிலைமைபெறு
நீதநிரஞ்சன அபேதசுகுணமே
வேதநாயகறுமனப் போதகர்மணமே (ஏதோ)

106-இராகம்-பந்து-ஆதிதாளம்.

பல்லவி.

நீயேசர்வசக்தன்-நல்ல
நிச்சயனேகன அகண்டபனே

அநுபல்லவி

தாயுந்தந்தையும் தமருமஅற்றாயே
மாயுந்தொழிலறு வாழ்வுபெற்றாயே (நீயே)

சரணங்கள்.

1. பாலாயிரம்அண்டம் படைப்பாய்உடைப்பாய்
எல்லாஉலகமும் எள்ளினுள்அடைப்பாய் (நீயே)

2. அஸ்திவாரந்தான் அருந்சுவரில்லையே
பத்தியாநீசெய்த பகிரண்டமிலையே (நீயே)

3. பலபொருள்தாங்கிடும் பர்வதம்போலே
தலைபண்டகோடிகள் தாங்குவாய்மேலே (நீயே)

4. திரிநெய்செப்பில்லாத் தீபங்கள்போலே
பரிதிசந்திரன்மீன் பலசெய்ததாலே (நீயே)

5. அண்டம்அகண்டம் அடங்காதசரீரம்
தொண்டர்கள்மனமலர் சுமக்குமோபாரம் (நீயே)

6. பாரபூதங்கள்உன் பணிசெய்யுஞ்சரியே
சூரியன்உனதூட்டு சோதிமுன்கரியே (நீயே)

7. யுகம்பலகோடிகள் உனக்கரைக்ஷணமே
நிகழுமுக்காலமு நினக்குக்கிரகணமே (நீயே)

8. சகலர்க்கும்ஊட்டிநீ தானென்றுஉண்ணாய்
நிகழும்பெருங்காவலால் நித்திரைபண்ணாய் (நீயே)

9. தினகரசந்திர தீபம்ஏற்றிடுவாய்
வனமுகிற்கடத்தால் மழையூற்றிடுவாய் (நீயே)

10. நடவாய்வறவாய் நாடெங்கும்இருப்பாய்
உடலாய்உயிராய் உயர்வாய்பொருப்பாய் (நீயே)

11 மரங்களினுழைந்தே மலர்வாய்கிளைப்பாய்
கரங்களில்லாதே கருமங்கள்விளைப்பாய் (நீயே)

12. கண்ணுப்பொருள்களைக் காட்டுவாய்பார்ப்பாய்
அண்ணுசகலமும் ஆட்டியேதீர்ப்பாய் (நீயே)
13. கனைகடல்உனதருட் கடலிலோர்திவலை
இனிவேதநாயகா எனக்கென்னவேலை (நீயே)

---

## 107-இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி

ஞானகுருபரவடிவே அருமறையின்முடிவே (ஞான)

அநுபல்லவி.

மோகனசுகாசனசம்பிரம முத்திபலித்திடும் நித்தியபரப்பிரம(ஞா)

சரணங்கள்.

1. பரமானந்தன் நீ தனக்குக்கிருபையில்லையா எந்தன்
பாவம்தொலைத்தென்னை ஆள்வதுனக்கொருமலையா
தாமதம்நீசெய்யதேகம் எனக்கென்னநிலையா நிதம்
தஞ்சம்பத கஞ்சப்பிர பஞ்சம்தரு நஞ்சம்தொலை (ஞான)
2. தீனகிருபாநிதியென்று பேர்கொண்டநீஅலவா அருள்
செய்தென்னை ஆள்வதினால் உனக்கியாதொருசெலவா
ஆனமலர்பதம்அண்டம் நான்கிள்ளைநீஇலவா புவி
அஞ்சப்புலன் அஞ்சுப்பகை நெஞ்சம்செயுவஞ்சந்தொலை(ஞா)
3. நின்மலநித்திய நிரஞ்சனநீதவிநோதா நாளும்
நிகிலசராசரம் யாவையும்தாங்கும்பிரக்கியாதா
தன்மவிலாச சுகானுபவானந்தநீதா
சாடும்வினை வாடும்வழி பாடும்பர வீடும்கொடு (ஞான)
4. நம்பும்அடியவர் துன்பம்அகற்றுங்குணாளா
நாசமகேசபிர காசவிலாசதயாளா
அம்புவியில்வேதநாயகன் போற்றும்பொற்றாளா இங்கும்
அங்கும்புவி எங்கும்புகழ் தங்கும்பகி ரங்கம்பெறு (ஞான)

---

## 108-இராகம்-சமனோகரி-ஏகதாளம்.

பல்லவி.

மெய்யிது மெய்யிது மெய்யிது தேவே மெய்

அநுபல்லவி.

ஐயையோஎன்செய்வேன் அருள்புரிகோவே (மெய்)

சரணங்கள்.

1, மலர்த்துணைப்போற்றாத வாயனும்நானே
கலந்துநின்பணிசெய்யாக் காலனும்நானே (மெய்)

2. கண்டுநீர்பெருகாத கண்ணனும்நானே
அண்டும்பாவியர்க்கெல்லாம் அண்ணனும்நானே (மெய்)

3. நிதம்உனைநினையாத நெஞ்சனும்நானே
மதங்கொண்டுதிரிகின்ற வஞ்சனும்நானே (மெய்)

4. கனிந்துனைச்சேவியாக் காதனும்நானே
தினந்தினம்வணங்காத சிரத்தனும்நானே (மெய்)

5. கருதிஉன்புகழ்கேளாக் காதனும்நானே
சுருதியைமறுத்திடும் சூதனும்நானே (மெய்)

6. கடுகஆலயம்செல்லாக் காலனும்நானே
முடுகியவினைக்கெல்லாம் மூலனும்நானே (மெய்)

7. போதஅபேத புநிதநிஷ்கோபா
வேதநாயகன்தொழும் விமலசொரூபா (மெய்)

---

109-இராகம்-சாமா-ரூபகதாளம்.

பல்லவி.

பரபிரமமே திருவருள் தரல்கிரமமே அநுதினமும்

அநுபல்லவி.

வரகுணசுகானுபாவ
சுரகணபூஜிதவைபவ (பரபிரம்)

சரணங்கள்.

1. செய்வதெல்லாம் தீவினையே
தினையளவும்உனை நினையேன்
தெய்வமேநம்பினேன் உனையே
தீர்த்தருள்வாய்துயர் தனையே (பரபிரம்)

2. அறியேன்பேற்றுக் கிழக்கு
அன்புமில்லேன்நின் கழற்கு
சிறியேன்பேசவன் வழக்கு
ஜெபதபத்தில்லைப் பழக்கு (பரபிரம்)

3. பாழ்மனமோவல் விரும்பு
பாவம்அதற்குக் கரும்பு
தாழ்வுறுநான்சிறு துரும்பு
சாமிஎன்மேல்மனந் திரும்பு (பரபிரம்)

4. நினையேன்தர்மம் அதர்மம்
நிலையிலைநான்மூட ஜென்மம்
அனையேனஇன்னம் வர்மம்
அகற்றிவாய்எனது கர்மம் (பரபிரம்)

5. அகண்டமண்டலாதி பத்திய
ஆதியந்தரகித நித்திய
யிருந்தருணைபரண சத்திய
வேதநாயகன் ஸ்துத்திய (பரபிரம்)

———()———

110 இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

பாதம்நம்பினேனே-போதம்அருள்கோனே

அநுபல்லவி.

வேதமுதலோனே மாதவர்பிரானே

சரணங்கள்.

1. ஆதரவுநீயே ஐயனேஎன்தாயே
வாதைபலநோயே மாற்றிஅருள்வாயே(பாதம்)

2. தீங்குகள்அனேகம் செய்திடும்என் துரோகம்
நீங்கிடவிவேகம் நீஅருள்அமோகம்(பாதம்)

3. முத்தர்கள்சமுகனே முக்கியபிரமுகனே
உத்தமசுமுகனே ஓவேதநாயகனே(பாதம்)

### 111-இராகம்-கனகவசந்தம்-ஆதிதாளம்.

பல்லவி.

நீயேதுணைபரனே-துன்பம்
நீங்கிட-அருள்வரனே

அநுபல்லவி.

மாயாதிமிர விஜயதினகரனே
தாயாகியசர்வ சாதககரனே (நீயே)

சரணங்கள்.

1. அடியேன்செய்வதெல்லாம் அரும்பாவம்
கொடியேன்மீது கொள்ளாதேகோபம் (நீயே)

2. பண்ணேன்துதியே படியேன்விதியே
கண்ணேமணியே கதியேநிதியே (நீயே)

3. உனையேநம்பிடில் உண்டோபயமே
அனையேவினைதீர்த் தருள்வாய்ஜெபமே (நீயே)

4. மாதவம்உடையவர் மகிழ்மலரகிதா
வேதநயகன்தொழும் விபுதர்கள்சகிதா (நீயே)

---

### 112-இராகம்-பைரவி திரிபுடைதாளம்.

பல்லவி.

நாதாகனே-மேதாதினம்-ஈதாவரமே

அநுபல்லவி.

போதாசுக-தாதாஅதி-கியாதாபிர-சாதாபுவி (நாதா)

சரணங்கள்.

1. நித்தியம்அநித்திய சுகத்தினைமதித்திடு
பைத்தியம்விடுதநினிப சத்தியம்உதித்திடவே (நாதா)

2. சுந்தர மடந்தையர்கள் சந்திரமுகந்தனை
நினைந்தெனதுசிந்தைசெய் தந்திரம்ஒழிந்திடவே (நாதா)

3. சொப்பனமேஒப்பனைகொள் அற்பஉடலைப்பொருள்
எனப்பிரியம் வைப்பதற்கு நற்பலன்உற்புவன (நாதா)

௪. பாதர்நிதிபூதலமேல் ஆதரம்உறுதபடி
சாகப்பிரபோதமருள் வேதநாயகன்புகழும் (காதா)

---

## 113-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

வேதநாயகனே-மெய்-மெய்-மெய்-மெய்

அநுபல்லவி.

பாதகஞ்செய்துழலும் பாழ்மதியே ஐயன்
பாதகங்கள் அன்றி நமக்கார்கதியே
பூதலவாழ்வினைநீ புகழ்கிறியே வெறும்
பொய்-பொய்-பொய்-பொய் (வேத)

சரணங்கள்.

1. அத்தமியாதொளிர் திவாகரனே அதி
அற்புதமான சிவாகரனே
சித்தமிசைஒளிர் சுதாகரனைத் துதி
செய்-செய்-செய்-செய் (வேத)

2. பூதலம்எங்கும் இசைபோனவனே அதி
புனிதனே உயிர்க்குயிர் ஆனவனே
பாதவர்காணுகின்ற மானவனே உன்னுள்
வை-வை-வை-வை (வேத)

3. நாதபூதபௌதிகஸ் தாபனே வேத
நாயகன்நீதில்என்றும் ஞாபகனே
ஓதரிதானசர்வ வியாபகனைப் பணிந்
துய்-உய்-உய்-உய் (வேத)

---

## 114-இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

ஓஓஜெகநாதா-ஒருவரம்-உதவிடல்ஆகாதா

அநுபல்லவி.

தேவேதினம்பல பாவேபாடிஎன்
நாவேயிளைத்தேனே (ஓஓ)

சரணங்கள்.

1. மனம்விஷயப் பிரியம் சகலமும்
வாகா கைங்கரியம்
சினம்மதம் மாற்சரியம் பூண்டஎன்
செய்கைகள் ஆச்சரியம்
இனமாகியபக்த ஜனமுடன் ஐக்கியம்
கனவிலும் நீங்காயல் (ஓஓ)

2. பொய்மைமெய் யெனநாடி அநித்தியப்
பொருள்களை யேதேடி
வையகம் எங்கும்ஓடி நான்செய்த
வஞ்சகம் பலகோடி
மையற்கரி இடர்கள்-செய்யவேதொடருதே
ஐயோ-கூ-கூ-கூ (ஓஓ)

3. நேசர்சிந்தா மணியே அடியேன்
நெஞ்சகம்பூண் அணியே
ஆசையில்வரும் பிணியே தொலைந்துநல்
அறமேவிடப் பணியே
ஈசனே உனைத்தொழும் தாசன்வேதநாயகன்
பாசவலைஉறுமல் (ஓஓ)

---

115-இராகம்-தேசமுகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

போதம்தரஎன்ன விவாதம்-எனக்கமல
போதம்தரஎன்ன விவாதம்

அநுபல்லவி.

வேதம் உணர்ந்தொழுகும்
நீதம் உடையவர்க்குப்
பேதம் அறவரப்பிர
சாதம் அருள்தெய்வமே (போத)

சரணங்கள்.

1. மோகம்பெருகியலௌ
கிகம்எனும்பெரும்பிர
வாகந்தனில்அழுந்தி
ஆகம்மெலிந்தேன் ஐயா (போத)

2. நெஞ்சோர் புறம்புனல்கள்
அஞ்சோர் புறம்மின்னார்கண்
நஞ்சோர் புறம்வருத்தும்
என்சோர் வெலாம்அகலப் (போதம்)

3. பெண்ணாசை யாலும்வளர்
மண்ணாசை யாலும்நிதி
எண்ணாசை யாலும்மனம்
புண்ணாகி வடிவானேனே (போதம்)

4. ஏதும் அறிவில்லாஎன்
மீது வர்மஞ்செய்தல்த
காது பரமபக்தர்
ஓதும்வேதநாயகா (போதம்)

---

116-இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

சருவேசா சரணம்-எனக்குன்-தாளே ஆபரணம்.

அநுபல்லவி.

இரவும்பகலும் உனையே அநுசரணம்
இசைந்திடச்செய்யிது நல்லபிரகரணம் (சரு)

சரணங்கள்.

1. நீயேசெய்வதெல்லாம் உபகாரம்
நின்மேற்சொல்லஉண்டோ விவகாரம்
தீயேன்புரிந்திடும்பிழைகள் அபாரம்
தேவரதிசெய்இதற்கோர் பரிகாரம் (சரு)

2. புண்ணியம்செய்திலன்கடுகுப் பிரமாணம்
பொய்யன்நான் ஆயினும்இது பிரமாணம்
எண்ணிடில்எனக்குமின்னார் விழிபாணம்
என்சரித்திரம்பெருங்கதா புராணம் (சரு)

3. பேசுவதெல்லாம்வாசா ஞானம்
பெரும்பாவியர்க்கெல்லாம்நான்பிர தானம்
தேசாசகலமும்உனதா தீனம்
நீயருள்எனக்குக்கிருபாரத பரனம் (சரு)

4. ஈமேல்தொடுக்கின்றபாணப் பிரயோகம்
   எனநீமுனிந்திடில்ஏது நிர்வாகம்
மாமோகாதியில்மயங்கி னேன்ஆகம்
   வரவேதநாயகா அருள் பரிபாகம் (சரு)

---

117-இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

சமயம்ஈதையா-நலம்எனக்-கமையஓதையா

அநுபல்லவி.

அமர்செய்தீவினைச் சுமைதொலைத்தெனை
அமலன் ஆக்கிடல்நேர்த்தி-ஒரு
சமமிலா அருட் பூர்த்தி-உறு
நிமலகாரணமூர்த்தி (சம)

சரணங்கள்.

1. இன்னந் தாமசமோ வினைசமந்
   திடஎன்றால் வசமோ எனக்
இன்னல் சகசமோ உனக்கருள்
   ஈய அவசமோ
அன்னமென்னடை-மின்னல்நேரிடைக்
   கன்னியர்விழி இணையே மனம்
தன்னில்பாய்ந்திடும் கணையே இனி
   என்செய்வேன்நீ துணையே (சம)

2. கருணை கூராயோ எனதுளக்
   கவலை தீராயோ இந்தத்
தருணம் வாராயோ எளியேன்
   தன்முகம் பாராயோ
இரணியம்பெண்கள் - தரணிமீதந்தக்
   கரணமேவமெய் துறந்தேன் கடல்
திரணம்போலெங்கும் பறந்தேன் அன்றன்
   சரணபங்கயம் மறந்தேன் (சம)

3. மாயை நீக்காயோ எனைமுகம்
   மலர்ந்து நோக்காயோ வினைத்
தீயைப் போக்காயோ எனைவிதி
   சீலன் ஆக்காயோ

நீயலாதுசகாயம் எதினித்
தீயவர்பயங்கரனே-மல
நோய் அற அருள்வரனே-வேத
நாயகன்தொழும்பரனே (சம)

118-இராகம்-இந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

வாவா-வாவா-என் இருதயந்தனில்
வந்தேமலரடி-தந்தே ஆண்டிட (வாவா)

அநுபல்லவி.

சாவால்வருந்துமுன் காவாகாத்திடில்
தாவா-பூவார்-ஜீவா-தேவா (வாவா)

சரணங்கள்.

1. மின்னார்கள்விழிவலை தன்னால்தயங்கினேன்
உன்னாதரவில்லாமல் பன்னாள்மயங்கினேன் (வாவா)
2. பொய்யானவாழ்வுதனை மெய்யாகநம்பினேன்
ஐயாநின்னடிக்கன்பு செய்யாமல்வெம்பினேன் (வாவா)
3. சிந்தாகுலங்கெட விரைந்தாளில்திண்மையா
எந்தாயேநீயெனை முனிந்தேகல்நன்மையா (வாவா)
4. வேதநாயகன்தொழும் சீதமலர்ப்பாகனே
ஆதவன் எனப்புவி மீதில்வருநாதனே (வாவா)

119-இராகம்-இந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னமும் என்மீதுனக்-கேன்பராக்கு
நின்னருள்தந்தே-யெனைநீகைதூக்கு (இன்ன)

அநுபல்லவி.

பன்னரியபுவன மனோகரா
உன்னதப்பிரதாப கிருபாகரா (இன்ன)

சரணங்கள்.

1. ஏதுங்கதியில்லா ஏழைநானே
என்னசெய்யும்சலம் நீங்குமீனே
பாதவனஜமலரை நம்பினேனே
பாகே அமுதே பசுந்தேனே (இன்ன)

2. கானலெனுங்காயசுக போகம்நாடிக்
கர்த்தனே செய்தேன் வினைகோடிகோடி
வேனில்வெயிலுற்ற புழுப்போலவாடி
வேதனைவந்தேன் உந்தன்பாதந்தேடி (இன்ன)

3. அண்டபகிரண்ட சர்வாதிகாரா
அவ்வியக்தமய அசகாயசூரா
தொண்டன்வேதநாயகன் மனோசஞ்சாரா
தோஷபரிகாரா உதாரதீரா (இன்ன)

---

120-இராகம்-சுருட்டி-சாப்புதாளம்.

பல்லவி.

இப்படிப்பட்டநான்-எப்படி உன்முகத்
தேவந்துவிழிப்பேன்-ஐயா (இப்ப)

அநுபல்லவி.

தப்பறியாதவர் தமதறிவினைத்தூண்டும்
தாயேதந்தையே என்மேல் நீயே இரங்கவேண்டும் (இப்ப)

சரணங்கள்.

1. பாதாதிகேசபரியந்தமும் நான்விடம்
பகலும் இரவும்மாயைபண்ணும் என்நெஞ்சில்நடம்
ஏதம் அற அந்நெஞ்சம் ஏகா இடம் எவ்விடம்
எனினும் உன்னிடம்வரவெனில் அதுமுழுமூடம்(இப்ப)

2. கர்த்தனே என்மேல்அற்பக்காற்றடிக்கினும்பொறேன்
காசினியெல்லாங்கேட்டுங் கலங்கினும்துயருறேன்
எத்தனைபொருள்பிறர் எனக்கீந்திடினுமறேன்
எச்சிற்கையாலுங்காகம் ஓட்டிநான் இழிவறேன்(இப்ப)

இகபரசுகானந்தமக் திவெதபரிச்சுமை
எளிதாய்ப்பிறர்செய்வதற்ப இடருக்கும்செய்யேன்கடுமை
மிக அற்பர்தமைச்சேர்வ தல்லால்மேலவர்தமை
வேதநாயகனேநான் பேணி அறியேன் இமை (இப்ப)

———

121-இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

எந்தவிதமும்உன்-கந்தமலர்ப்பதமே-அடியேன் அடைந்திடச்
சிந்தைமகிழ்ந்து நீ-தந்தருள்வாயிதமே (எந்த)

அநுபல்லவி.

அந்தரமென்றும்-அமர்சர்வசாக்ஷியே
வந்தனைசெய்பவர்-மானசக்காக்ஷியே (எந்த)

சரணங்கள்.

சகசமானிடர்தமக்குப்பாவமே-பிழைபாவும்பொறுத்துத்
தயைசெய்தாள்வதுநின் சுபாவமே
தகவே உன்சரித்திரப்பிரபாவமே அநுதினமும்பாடிச்
சாதகப்பெற என்மனதே பாவமே

தந்தைநீதானே-உனக்கொரு
மைந்தனும்நானே-இவ்வாறுநான்
சொந்தமானேனே-தரிசனம்
தந்தருள்கோனே-புவிதனில்

நிகரில்லாத நியாயப்பிரசுத்தனே
சகலலோக சராசரகர்த்தனே (எந்த)

மனைஅன்னத்தில்சல்லாய்நிறும்வகையே - வினைச்சோதித்திடில்என்
மனத்தில் உள்ளதெல்லாம் வினைத்தொகையே
குணம்உடைமேடாபுவிவாழ்வுவெறும்புகையே அதைவிரும்பி
என்மனக்குரங்கும் ஐம்புலன்களும் செயும்பகையே

கோதையர்யோகம் தனில்வரும்
வாதை அநேகம் எவர்க்குமே
ஈதநுபோகம் எனக்கினிப்
போதும் இப்போகம் அநுதினம்

புணரும் ஆநந்த பொக்கிஷசாலையே
மணமிருந்தருள் மலரும்சோலையே (எந்த)

3. தாதைபிள்ளைத்தள்ளல்பாந்தமா இதுநான்குபேரும்
சரியென்றொப்புக்கொள்ளும் சித்தாந்தமா
நாதனே எனைமுனிதல்சாந்தமா எனதுள இரும்பையெந்
நாளும் இழுக்கும்விஷயம்காந்தமா உனையேகதியென

கண்ணியசித்தர் பெருந்தவம்
பண்ணியசித்தர் நிகரறு
புண்ணியபத்தர் முதலுய
எண்ணிலாமுத்தர் அடையுமுன்

பாதநிதி அவர்க்கேபிராஸ்தியா
வேதநாயகன்பங்கென்னநாஸ்தியா (எந்த)

---

122-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏகாகனயோகா-அநுதினம்-எனையாண்டருள்வாயே

அநுபல்லவி.

சேகரகுணதிவ்ய தேஜோமயகாத்திர
பாகநித்தியானந்த பாக்கியபரமஸோத்திர (ஏகா)

சரணங்கள்.

1. கண்டுநிகர்மொழியும் வண்டுநிகர்விழியும்
தண்டுநிகர்புயமும் கொண்டுமயக்குமந்தப்
பெண்டுபிள்ளைகட்குழைத் துண்டுறங்கிநிதமும்
மண்டுவினையலாதுன் தொண்டுசெய்தறிகிலன் (ஏகா)

2. நாடேன்பெரியரோடு கூடேன்புண்ணியந்தன்னில்
நீடேன் உனதருளைத் தேடேன்உனதுபுகழ்
பாடேன் அநுதினங் கொண்டாடேபன்தாமரைச
சூடேன் அருவினையைச் சாடேன்சுரர்புகழும் (ஏகா)

3. நாதாதிவ்யப்பிரசாதா அகண்டசமூ
கிதாநினைவினுக்கதீதா அடியர்கள்ச
மேதாநிலைகொள்பஞ்ச பூதாதிரிகர்மவி
நோதாதினந்தினமும் வேதநாயகன்புகழ் (ஏகா)

---

123-இராகம்-மோகனம்-ரூபகதாளம்.

பல்லவி.

இன்னம்பராமுகமாமோ-வினை
நின்னருள்தானின்றிப்-போமோ

அநுபல்லவி.

மின்னல்உறுபுகழ் நன்னலமேவிய
வேதார்த்த-கனபோதார்த்தா-ஓ (இன்)

சரணங்கள்.

1. வன்பிழைஒப்புக்கொண் டாலே க்ஷமை
மன்னர்செய்வார்புவி மேலே
என்பிழையைப்பல காலே ஒப்பி
னேனேமுனிவேதென் பாலே
அன்பெனும்தெப்பம் இல்லாமல்வினைக்கடல்
ஆழ்ந்தேனே-துயர்-சூழ்ந்தேனே-ஓ (இன்)

2. தன்பதியெப்பகை யோரே கொள்ளத்
தான்பார்த்திருப்பவன் யாரே
நின்பதிஎன்பதி தேரே அதில்
நீங்காமல்உன்கண்முன் நேரே
உன்பகையோரெனும் காமக்குரோதிகள்
உற்றாரே-ஜெயம்-பெற்றாரே-ஓ (இன்)

3. நெஞ்சங்கவலைக்கு வீடா ஐயா
நின்சோதனைக்குநான் ஈடா
அஞ்சாதேநீஇங்கு வாடா என்
றருளாதின்னம்வேறு பாடா
தஞ்சமெனவேதநாயகன் போற்றிடும்
தாதாவேபெற்ற-மாதாவே-ஓ (இன்)



124-இராகம்-உசேனி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஏகநாதா அரும்பரம் போகம்நீதா

அநுபல்லவி.

பாகவிகசித வற்பகாரண்ணிய
பதிதபாவன பரமகாருண்ணிய

தேகப்பிறையதி ரூபலாவண்ணிய
தீயர்தமைச்சிக்ஷை செயும்நிர்த்தாக்ஷண்ணிய (ஏக)

சரணங்கள்.

1. நாளுமுழ்கினன் பாபஅங்கணம்
   நாடினேன்பெரி யோர்கள்வங்கணம்
ஆளும்படி தரித் தனைநீகங்கணம்
   அன்போடெனைச்சேர் நல்லோர்கள் தங்கணம்
நீளும்அகண்டித மாகியோங்கிய
மாளுந்தொழிலுறு மாசுநீங்கிய (ஏக)

2. அடியன்மீதுனக் கென்னபிணக்கமே
   அகற்றுவாயென தகங்கள்உனக்கமே
நெடிடநின்பத மலர்க்குவணக்கமே
   நிதமும்நான்செய்ய அருள்நல்லிக்கணமே
கடியதுயர்கடல் கடக்கஉனதிணை
அடிபலாதினி அயலுண்டோபுணை (ஏக)

3. உதிர்க்கும்பலகதிர் நிகரும்விதரனே
   உயிர்நித்தியானந்த நகரச்சதுரனே
துதிக்கத்துதிக்கவே இனிக்கும்மதுரனே
   சூழும்சிவராசிகள் தம்பிரானே
குதிக்கும்மாயையைக் கொன்றுதாழ்விக்கும்
மதிக்கும்வேதநாயகனே வாழ்விக்கும் (ஏக)

---

## 125-இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

தயைபுரியே எனதுளத் துயர்பிரியே (தயை)

அநுபல்லவி.

உயரும்தர்மசம் வர்த்தனா
   உத்தமர்தம்மன நிர்த்தனா
கபவர்இழிகுல மர்த்தனா
   கருதரும்புண்ய பர்த்தனா (தயை)

சரணங்கள்.

1. புண்ணியம்நாயேனுக் கெட்டி
   பொய்களெல்லாம் வெல்லக்கட்டி
திண்ணியமெய்ஞ்ஞான திட்டி
   சிறிதீயில் என்னநட்டி
சின்மயமே மெய்வேத நன்மயமே எனையுறு
   தின்மைப்பழியோடே நன்மைப்பலன்நீட
   உன்மெய்ப்பதம்நாட கன்மப்பயிர்வாட (தயை)

2. என்குறை பாராட்டாதே
   இன்னம்என்னை வாட்டாதே
நின்கோபங் காட்டாதே
   நிபங்கள் என்மேற் சாட்டாதே
நிச்சயமேநிலைபெரும் அக்ஷபமே கனமுறு
   நேசத்திடப்ஓங்க பாசத்திடும்நீங்க
   மாசற்றறம்வீங்க வாசத்ததைதாங்க (தயை)

3. அண்டசராசர ரூபா
   அகதிகளுக் கருதாபா
விண்டலமண்டல பூபா
   வேதநாயகன் லாபா
விண்மணியே எனதிரு கண்மணியே பழிசெய்யும்
   வேகப்பவமோட்டி மோகப்பகைவிட்டி
   பாகப்பதம்கீட்டி யோகப்பதிகாட்டி (தயை)

---

126-இராகம்-ஜங்கலா-ரூபகதாளம்.

பல்லவி.

நல்லவரந்தந்தாளுவாய்
   நாதனே அபேதனே (நல்ல)

அநுபல்லவி.

அல்லும்பகலும் உன்னைநாடி
   அற்புத பரமார்த்தத்தேட (நல்ல)

சரணங்கள்.

1. அன்பருடனேகூடவும் அநுதினம்துதிபாடவும்
இன்பசாகரம்ஆடவும் எனரைக்கண்டால்ஓடவும் (நல்ல)

2. பஞ்சபுலனை அடக்கவும் பாவக்கடலைக்கடக்கவும்
நெஞ்சம்ஒடுங்கிக்கிடக்கவும் நீதிநெறியில்நடக்கவும் (நல்ல)

3. தீனர்களையேதாங்கவும் சிந்தைத்துயரம்நீங்கவும்
ஞானவழியில்ஓங்கவும் நானும்அடியில்தூங்கவும் (நல்ல)

4. பத்தர்பரவுந்தேவனே பரமதிவ்வியசுபாவனே
வித்தகமனோபாவனே வேதநாயகன்ஜீவனே (நல்ல)

---

137-இராகம்-பூரணச்சந்திரிகை-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்தான்பராமுகமோ இதுதகுமோ ஸ்வாமி

அநுபல்லவி.

சந்நிதானதரிசனம் அருளாமல் (இன்னம்)

சரணங்கள்.

1. செந்தாமரைப்பதமே சேரேன்நானிதமே
நொந்தேன்பலவிதமே நோய்தீர்த்தருள்ஹிதமே
சிந்தைதனிற்பிரமை கொண்டேன்
தீமைகள்செய்து கைகண்டேன்
சந்ததமும்நலம் விண்டேன்
சஜ்ஜனசங்கமும் அண்டேன் (இன்னம்)

2. பூண்டேன்அபசரிதம் புகழேனின்சரிதம்
ஆண்டோய்என்துரிதம் அறவேசெய்துரிதம்
நீண்டபெருந்தகை பூணேன்
நீதிதனையுமே பேணேன்
மூண்டபெரும்பழி நாணேன்
முத்திபெரும்வழி காணேன் (இன்னம்)

3. அடியார்திரவியமே அமலோதயஸ்வயமே
வடிவார்ஆலயமே வளர்த்தேஜோமயமே
திடமுறு புவனாதாரா
தினகரகோடி சரீரா
விடயமுறு அதிகாரா
வேதநாயகன் உபகாரா (இன்னம்)

---

128-இராகம்-பிலகரி-ரூபகதாளம்.

பல்லவி.

கருணாலயநிதியே-தினமும்உன்
சரணம்புயம்கதியே (கருணாலய)

அநுபல்லவி

சருவபேதவிநோதகாரண
பரமசாதகபவநிவாரண (கருணாலய)

சரணங்கள்.

1. நிதம்வெளுக்க வெளுக்கவெண் தூசு
நிதந்தோறும் நிறையுமேமாசு
அதுபோல்எந்தன் அகமுறும்ஆசு
அகலவேஉன் அருள்ஒளிவீசு
அகிலகோடி விலாசகற்பித
சகலஜீவதயாள அற்புத(கருணாலய)

2. இங்கென்செய்கையாள் யாவும்நிகிர்ஷ்டம்
எனக்குப்புண்ணியம் என்றும்அநிஷ்ட்டம்
பங்கம் தீர்க்கில் உனக்குண்டோநஷ்ட்டம்
பரமனேயருளாயோ உத்கிரிஷ்ட்டம்
பாரமாகவே பண்ணும்பாதகம்
தீரவேநீசெய்வை சாதகம்(கருணாலய)

3. அமலபாஷ்கரா கோடிசொரூபா
அகண்டசச்சிதானந்த பிரதாபா
நிமலவேத வேதாந்தநிருபா
நிர்விகற்ப நிரஞ்சனதீபா
நீதபூரண நிலயமஞ்சித
வேதநாயகன் இதயரஞ்சித(கருணாலய)

---

129-இராகம்-அமீர்கல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதாகிடையாதா வரமேஜெகநாதா

அநுபல்லவி.

பாதாரவிந்தம்நம்பும் பாவியமேதாவியாக்க (நாதா)

சரணங்கள்

1. எந்தநாளுமூடவிர்த்தி இல்லையேதிரிகரணசுத்தி
மந்தமானஎன்துர்ப்புத்தி மாறவேஅருளாயோசித்தி (நாதா)
2. அவமெனுமதயானைஎன்வசம் ஆகவேயருள்ஞானஅங்குசம்
சுகதுக்காதிகளில்சமரசம் தோன்றவேஅருள்வாய்தயாரசம்()
3. அபயவரதகாரநிர்வாக ஆபத்பாந்தவஅருட்பிரவாக
விபவசார்வகௌமபோக வேதநாயகன்ஸ்வாநுபோக (நாதா)

---

## 130-இராகம்-அபூர்வம்.

பல்லவி

சருவவினோதா திருவருள்தாதா-சருவ

அநுபல்லவி.

இரவுபகல் உனதிணையடிநாடவும்
தருமநிர்மலசுக சாகரம் ஆடவும் (சருவ)

சரணங்கள்.

1. பசிதாகசோகரோக சாபசரீரம்
கசிவுறுமலஜல காமபண்டாரம்
சுசிஅறும்இதில்விளை தோஷம்அபாரம்
நிசமயனேஅருள் நீபரிகாரம் (சருவ)
2. கடல்நடுவேகரை காணுதகாகம்
இடர்உறல்போலவே எனதுநிர்வாகம்
மடம்அறஅருள்செய்நிர் பலபரிபாகம்
கடவுளைநாடினேன் கருணைப்பிரபாகம் (சருவ)
3 சுரகணசேவித துரிதவிநாசன
சருவதயாபர சாபவிமோசன
கருமநிவார கருணாவிலோசன
வரவேதநாயகன் மனகமலாசன (சருவ)

---

## 131-இராகம்-சாசாங்கி-ரூபகதாளம்

பல்லவி.

எத்தனைகவிபாடினும் பலன்ஏதுமில்லையே (எத்தனை)

அநுபல்லவி.

சித்தம்வாக்குக்கிரியை அத்தனையும்தினம்
உத்தமமார்க்கத்தில் உத்துநில்லாமல்

1. சந்தமும்பரன் சுந்தரபாதத்தை
அந்தரங்கம்தனில் சிந்தனைசெய்யாமல் (எத்தனை)

2. மோசஞ்செயும் ஆபாசங்களென்னும்பி
சாசந்தனைச்சர்வநாசஞ்செய்யாமல் (எத்தனை)

3. கோபம்பொறுமைபொய் லோபம்மதமுதற்
பாபங்கட்கேமனஸ் தாபங்கொள்ளாமல் (எத்தனை)

4. மும்மலபாசத்தை நிர்மூலமேசெய்து
நிர்மலசித்தனாய்த் தர்மம்செய்யாமல் (எத்தனை)

5. தாயகனும்வேத நாயகன்தீனர்ச
காயகன்தனைநெஞ்சுகள் நேயம்பண்ணாமல் (எத்தனை)

---

132-இராகம்-ஹம்சதொனி-ஆதிதாளம்.

பல்லவி.

ஞானோதயவரம் அருளே

அநுபல்லவி.

பானோதயபரம்பொருளே (ஞானோ)

சரணங்கள்.

1. மாயவிகாரசெகமே தேயாமல்அருள்சுகமே
தூயர்நேசனே ஸ்வயம்பிரகாசனே
தீயர்நாசனே சித்விலாசனே (ஞானோ)

2. தேகாபிமானம்அறவே யோகாநுசாரம்உறவே
பாகம்நீட்டுவாய் பாதம்நாட்டுவாய்
மோகம்ஓட்டுவாய் முத்திகாட்டுவாய் (ஞானோ)

3. ஆதாரம்வேறிலையே பாதாரவிந்தம்நிலையே
போததாயகா புண்ணியஆயகா
வேதநாயகா விமலதூயகா (ஞானோ)

133-இராகம்-தீனசங்கராபரணம்-ரூபகதாளம்

பல்லவி.

ஆதிமூலனே நீதிநூலனே நித்ய (ஆதி)

சரணங்கள்.

வேதபோதசாதகம்பெற நீதயைபுரியாய் நித்ய (ஆதி)

அநுபல்லவி.

1. திட்டமாசமாயைக்கே அஷ்டதிக்கும்விஜயமாநான்
துஷ்டன் ஆதலால் உனக்கும்என்கிட்டவரப்பயமா
கெட்ட இதயமேஅதில்கஷ்டம்உதயமே
சிஷ்டரோடெனைக்கூட்டி ஞானநிஷ்டன் ஆக்குவாநித்திய (ஆதி)

2. துணைஉன்பாதஇணையலாது சொல்லவேருண்டோ
இணையிலாயொருதுணையிலாய்தெய்வம் எனக்குத்தான் இரண்
குணம்தருவாயேஅருள்மணம்தருவாயே [டோ
உணரொண்ணாதநினதுசேவைபுணரவேஅருள்வாய்நித்திய ()

3. மனையைச்சுத்தஞ்செய்தினிதுறல்மனிதர்க்கும்சகசமே
நினதகமெனும் எனதுநெஞ்சம்நிதமலவசமே
புனிதம்செய்வாயேஅதில்இனிதமர்வாயே
தநயன்வேதநாயனுக்குன்தரிசனமருள்வாய்நித்ய (ஆதி)

---

134-இராகம்பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

பிக்ஷை அருளாயோ ஞான (பிக்ஷை)

அநுபல்லவி.

அக்ஷயநிர்மல லக்ஷணனே ஜீவ
ரக்ஷணனே அதி பக்ஷமுடன்ஞான . (பிக்ஷை)

சரணங்கள்.

1. சத்தியுமாருதபுத்தியும் ஓயாத
பத்தியுமெய்ஞ்ஞான சித்தியுமுத்தியும் (பிக்ஷை)

2. நேசருடன்சக வாசமும்ஞானப்பிர
காசமும்என்விசுவாசமுநேசமும் (பிக்ஷை)

3. தானம்பொறைஅருள் வானம்இதராபி
மானம்நிதானமும் மோனமுந்தியானமும் (பிசை)

4. பூதமெல்லாம்விப ரீதம்உருமலே
ஆதரவுசெய்யும் வேதநாயகனே (பிசை)

---

135-இராகம்-சௌராஷ்டிரம்-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தமனம்-கெட்டதையா
பந்தவலைப்-பட்டதையா (இந்த)

அநுபல்லவி.

சந்ததம் புண்ணியந்திரண்ட
சுந்தரதேகா நான்கொண்ட (இந்த)

சரணங்கள்.

1. சொன்னபடி கேளாச்சண்டி
தோஷமூட்டை தூக்கும்பண்டி
உன்னிடம்வரவே கோண்டி
ஓடும்விஷபத்தை ஆண்டி (இந்த)

2. இதரர்வாழ்க்கைக்கண்டால் வாட்டம்
எவருங்கெட்டாலோ கொண்டாட்டம்
மதனநெருப்புக்குக் காஷ்டம்
வாயுவினும் வேகம் ஓட்டம் (இந்த)

3. சுகதுக்கபேதம் போதிக்கும்
சூழ்நலமெல்லாம் பேதிக்கும்
பகல்இரவென்று சாதிக்கும்
படுவிஷம் உண்டு சோதிக்கும் (இந்த)

4. காடுங்கரையும் சஞ்சாரம்
காமப்பசாசுக் காகாரம்
நாடும்பிரபஞ்ச வியாபாரம்
ஞானம் இதற்கெட்டாத தூரம் (இந்த)

5. பாதகங்கட்கெல்லாம் குரு
பாசம்விளைவிக்கும் எரு
ஏதுவில்லா விஷதரு
எனக்கனுகூல சத்துரு (இந்த)

6. பஞ்சபூதாதி நிர்மாணு
பக்தர்கள் இதயவாணு
விஞ்சையாம் சாஸ்திரபுராணு
வேதநாயகம் பிரமாணு (இந்த)

---

136-இராகம்-மனோகரம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

எந்தையே-உனக்கும்-அடியேனுக்கும்
எத்தனை-பேதம்-ஐயா (எந்தை)

அநுபல்லவி.

சந்ததசர்வ சாம்பிராஜ்யபிரபுத்துவ
சாசுவததேவதேவ மகத்துவ (எந்தை)

சரணங்கள்.

1. தேவனீசகல புவனேசன்
சிறியனான் உந்தன் தாசானுதாசன்
காவலனைநீ ஸ்வயம்பிரகாசன்
கசடனை அந்த காரப்பிரவேசன் (எந்தை)

2. சத்தியமாக நீதர்மசொரூபி
தாரணிமீதிலே நான்பெரும்பாபி
நித்தியனான நீசுத்த அரூபி
நிச்சயமாக நான்மெத்தக்குரூபி (எந்தை)

3. சமமில்லாதநீயே மலரகிதன்
சாமிநான் உலகில் மலசகிதன்
விமலனேநீபல பிராணிகள்விகிதன்
வேதநாயகனேநான் எவர்க்குமே அகிதன் (எந்தை)

## காலை ஸ்தோத்திரம்.

---

### 137-இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

உமக்கேநமஸ்காரமையா-இடர்
ஒன்றும்வாராமலே-நன்றுசெய்தாயே (உனக்கே)

அநுபல்லவி.

தனக்கோர்நிகர் என்றுமிலாத
தயாகரனுன பராபரனே (உனக்கே)

சரணங்கள்.

1. நேத்திரங்களைநீயெம் மாத்திரமுமூடாமற்
காத்திருந்தாயெனை இராத்திரிமுழுதும் (உனக்கே)

2. சத்துருபயமின்றி நித்திரைசெயவெனைப்
பத்திரமாயுன்கையில் வைத்திருந்தாயே (உனக்கே)

3. மூன்றும்அரவம்விஷ ஜெந்துக்களால்அபாயம்
வந்துகெடாமலேகா பந்துசெய்தாயே (உனக்கே)

4. தீயும்வெள்ளமுங்காற்றும் பேயும்விலங்கும்பல
நோயும்வராமற்காத்தாய் தாயுந்தந்தையும்போல (உனக்கே)

5. நாங்களோர்தடையின்றித் தூங்கஇராமுழுதும்
விங்கிருட்போர்வைதனைத் தாங்கிநின்றுயே (உனக்கே)

6. இருட்மொறிவிடியும் பொருட்டுநீவிதனை
உருட்டிஇராமுழுதும் புரட்டிநொந்தாயே (உனக்கே)

7. பூதநாயகனேபிர போதநாயகனேசங்
கீதநாயகனேநல் வேதநாயகனே (உனக்கே)

138-இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

சருவஜீவாதார-பரனேநமஸ்காரம்-சாக்ஷாதீஎகனேநின்
தயவினுக்களவிடொணாததே-பரிஸ்காரம்

அநுபல்லவி.

கருணைம்பரகுண கர்த்தவ்யனே-ஞான
திருவிலாசமறையின் தெளிவேபூரணத்பாண (சருவ)

சரணங்கள்.

1. எந்தத்ததியினிலுங் காத்தருள்புரிதேவே
எல்லாமுணர்ந்தருளீயும்
ஏகவைபோகனே மாசிலாமெய்க்கோவே
சந்ததம்வந்தடுக்கும் நிந்தையனைத்துந்தீர்த்த
சுந்தரசுகுணமலி துத்தியன்விழிபார்த்த (சருவ)

2. பாழுலகிடுத்தெந்தனை வாதித்திடுங்கோரம்
பரிபூர்ணக்ருபைபாலித்து
பாதுகாத்தருளதை தந்தேயுபகாரம்
தாழும்படிசெய்பல சதிசற்பனைகள்நாளும்
தானடையாமலாண்டாய் தயவதுவோவிலாசம் (சருவ)

3. இருளதுமாறிதிங்க ளவன்ஒளியைத்தரவே
இமையதுமூடாமற்காத்தனை
இடர்தரும்சத்துருவோடுபல்விஷம்அண்டாமற்காத்த இறைவே
கருத்துக்கெட்டாததெல்லாம் கருதிசிந்தனைசெய்த
கனசுகமேமெய்வாழ்வே கலங்காதெனக்குள்உய்த (சருவ)

4. வாதும்பற்பலசூதும்காதக மெல்லாம்துரந்தரா
வள்ளலாய்க்கிருபைக்கண்பார்த்த
மாசிலாதபரனே வல்லவனேநிரந்தரா
வேதநாயகன்மனம் போதநாயகனேதுதி
விபூதர்ப்பரவிதொழும் விமலனேயருள்கதி (சருவ)



139-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆளாயோஎனேயே-நம்பினேன்கெடு
நாளாகஉனேயே (ஆளா)

அநுபல்லவி.

நீளும்புவனுதாரா கேயருக்குபகாரா
நிகரறும்இகபர சுகமருள்வரதா
அகம்அறுசுருணர்கள் புகழ்அநவரதா (ஆளா)

சரணங்கள்.

1. எத்தனைபதங்களுக் கெடுப்பேன்கற்பனைநிதம்
எல்லாஞ்செலவாய்ப்பாட்டுக் கினிமேல்இலேஆஸ்பதம்
அத்தனே இரங்கிநீஅருள்வாய்பரமபதம்
அன்றேர்பழம்பாட்டன்றி அறியேனுன்புதுப்பதம்
அல்லல்வினையகல நல்லவரந்தந்தெனை ஆளுவாய் அரு
தல்லவெனிற்பதங்கள்சொல்ல நல்வாக்குதவிமூளுவாய் கன
அகணித-சுகுணபிர-முகபரமேசா
ஜெகமயல்-அகலமெய்-திகழ்உபதேசா (ஆளா)

2. கனியினுல்மரத்துக்குப் பலனுண்டோஅதுபோல
காசினிமீதடியேன் பேசினநிதிநூலே
இனிபபயன்பிறருக் கீயினும்அதனுலே
எள்ளளவுநலந்தான் எனக்குண்டோபுவிமேலே
இலக்கஅந்நூலின்மிசைவிலகியதுர்க்குணங்கள்யாவுமேவெகு
கலக்கமுறஎன்மனமலர்க்கண் அநுதினமுமேவுமே-எந்தன்
இதய-மதயமலே-முதல்அறநீக்கி
நிதம்நிதம்-உனதிரு-பதமலர்தேக்கி. (ஆளா)

3. ஒங்கிலாண்டகோடி தாங்கிடும்பரிசன்னியா
உத்தமமூர்த்திகர சுத்தபிரமசைதன்னியா
நீங்கருமாமகிமை வீங்கிவளர்சௌஜன்னியா

நீதநெறியிலகுபாதகம்அற அறனூட்டுவாய்-பெருங்
கோதகல்இகபரசாதக ஞானநிலைகாட்டுவாய்-அரு
நிதிபர-கதியெனும்-விதிஉபதேசா
துதிசெய்-வேதநாயகன்-மதிஅமர்கேசா. (ஆளா)

---

140-இராகம்-பைரவி-அடதாளம்.

பல்லவி.

நெடுநாள்நம்பினேனையா-நீனிலத்திலுந்தனைமெய்யா
நின்னருள் புரிந்தாளையா
நிபுணருளத்தோங்கும்-நித்தியானந்தபரனே
நித்ரையினுமறவா-பத்திகொண்டேன்கரனே (நெடு)

அநுபல்லவி.

புடவியுமுளவியாவும் புரந்தவனேமெய்போதா
புகலொணுஞானமிழ்தே பூசுரர்துதிநாதா
தினமுஞ்செய்பாதகனைத்துந் தீர்த்திடுவோனேநீதா
தினமும்நின்கழலை சிந்தித்தேன்தெரியாதா (நெடு)

சரணங்கள்.

1. கருணைவாரிதியேமா காருண்யசீலனே
ககனமெல்லாம்பணிசெய் கழுமறைநாலனே
அருஞ்ஞேயனேசுந்த்ர அபரஞ்சிதமூலனே
அழகுநின்பதங்காண ஆசைகொண்டேத்யாலனே (நெடு)

2. எல்லோம்உணர்ந்தோனீயே எங்குநிறைந்தநீயே
இயாவும்சிருஷ்டித்தோனீயே என்னுளத்தோனும்நீயே
வல்லபகாப்பொருள்நீ மயல்தவிர்ப்போனும்நீயே
மஞ்சுரும்பதங்காண மகத்வஆசையும்நீயே (நெடு)

3. வேதநாயான்மன வியாபகனேவினோதா
விண்ணவர்பரவிய விமலனேகுணநீதா
பாதமேகதியென பற்றியனந்தகாலம்
பணிந்தேன்நினைந்தேன்திவ்ய பரனேவிசாலம் (நெடு)

---

## ௲௮௱௭௰௬ வருடத்துப் பஞ்சத்தைப்பற்றி பாடியது.

—()—

141-இராகம்-உசேனி-திசிரஜாதி-மட்டியதாளம்.

பல்லவி.

பஞ்சம்தீர் ஐயா-உனையன்றித்
தஞ்சம்ஆர்-ஐயா (பஞ்சம்)

அநுபல்லவி.

வஞ்சகமேகம் உலோபர்கள்போலே
மண்ணில்மழை பொழியாமையினாலே
சஞ்சலமாகித் தளர்ந்தோமென்மேலே
சாமிகதிஉந்தன்-தாமரைக்காலே (பஞ்சப்)

சரணங்கள்.

1. எட்டுநாள்பத்துநாள் பட்டினிபோடே
இடையிலேகந்தை இருகையில்ஓடே
ஒட்டிஉலர்ந்தஉடல் என்புக்கூடே
ஒருகோடிபேர்கள் வசிப்பதுகாடே
ஊரும்இல்லாமல் குடிக்கத்தண்
ணீரும்இல்லாமல் அன்னமெனும்
பேரும்இல்லாமல் பசிதீர்க்க
ஆரும்இல்லாமல்
பாரில்அனேகர் பரதேசிஆனாரே
ஊரில்அனேகர் உயிர்மாண்டுபோனாரே (பஞ்சம்)

2. தாரங்களையே புருஷர்கைவிட்டார்
தந்தைதாய்பிள்ளைகளை விலைவிட்டார்
வேறும்இலையுங்கிழங்கும் சாப்பிட்டார்
வெறுங்கையராய்வெளியே புறப்பட்டார்
வேலியும்அற்றார் பெண்சாதிகள்
தாலியும்விற்றார் வேலைசெய்து
கூலியும்பற்றார் பலபல
சோலிகள் உற்றார்
தோலும்எலும்புமாய்த் தோன்றியேசோம்பினார்
பாலரும்தாய்முலைப்பால் அற்றுத்தேம்பினார் (பஞ்சம்)

3. பஞ்சம்இதுபோலக் கண்டதில்லையே
பலபேர்அடுப்பில் வையார்கள்உலையே
நஞ்சம்போல்நாட்கு நாள்ஏறும்விலையே
நாங்கள்படுந்துன்பம் நானூறுமலையே
நரர்கள்மெய்வாடி மனமிக
உருகித்தள்ளாடிக் கண்ணீர்ஆறாய்ப்
பெருகியேஓடிப் பிக்ஷைகேட்க
வருபவர்கோடி
இரவுபகல்எங்கும் ஏழைகள்சத்தமே
பரனேகலியொடு பண்ணினார்யுத்தமே (பஞ்சம்)

4. ஏரிகுளம்நதியாவும் நீர்சுண்ட
ஏகமாக்கோடைகனல் எங்குமண்ட
சேரிமாடாடுகள் செத்துப்போய்வெண்ட
ஜெகமுழுதும் உதராக்கினிஅண்ட
தீனர்கள்நாட அவர்களை
ஈனர்கள்ஜாட தங்கள்கத
வானதைமூட அதுகண்டு
மானிகள்வாட
மேனிகுலைந்து மெலிந்தாரே இப்படி
கோன்உனையன்றிக்குடியாவதெப்படி (பஞ்சம்)

5. மண்ணில்அனேகர் என்கண்ணின்முன்மாய்ந்தார்
மரஞ்செடிபுல்லையு மாடுபோல்மேய்ந்தார்
எண்ணில்லாப்பேர்கள் சருகுபோற்காய்ந்தார்
இளைத்துக்களைத்துத் தவித்துடல்ஓய்ந்தார்
ஏங்கிடுவாரும் களைகொண்டு
தூங்கிடுவாரும் அன்னம்உண்ண
வாங்கிடுவாரும் உடன்உயிர்
நீங்கிடுவாரும்
சங்கிந்தவண்ணம் இருண்டதுமேதினி
தாங்கும்வேத நாயகாதஞ்சம்நீ இனி (பஞ்சம்)

## ஹிதோபதேசக் கீர்த்தனைகள்.

## கடவுளைத் தியானிக்கும்படி வற்புறுத்தல்.

142-இராகம்-குந்தளவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீ-ஈசனுமத்தைவாழ்த்துவாய்-தினம்
வாழ்த்துவாய் (மனமே)

அநுபல்லவி.

அனவரதமும்நீ அரும்பதம்பாடிக்
கனசுகமேவிடக் கலந்துகொண்டாடி (மனமே)

சரணங்கள்.

1. வம்புவார்த்தைகளே பெரும்பாவம்
வாய்க்குச்சேதமல்லால் என்னலாபம்
எம்பிரான்திருமகிமைப் பிரதாபம்
எடுத்துப்பேசுவது சத்காலக்ஷேபம் (மனமே)

2. ஏகமாக உள் ளுருகியேபரிய
இருகண்ணுணந்த பாஷ்பங்கள்சொரிய
தேகபரவசம் தாயன்புவிரிய
சிரகராதிகள் அஞ்சலிபுரிய (மனமே)

3. கருப்புதின்னக் கைக்கூலியும் ஏனே
கற்கண்டோ அமுதோ பசுந்தேனே
விரும்பும்பிரமானந்த மேயதுதானே
வேதநாயகன்பேர்க் கினைசொல்லநானே (மனமே)

---

## இதுவும் அது.

143-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீமறவாதே-ஐயன்பதத்தை (மனமே)

அநுபல்லவி.

கனவிலும் நிதமுறு நனவிலும்பலபல
நினைவிலும் ஒழியாமல் அனவரதமுமே (மனமே)

சரணங்கள்.

1. மண்ணுஞ்சராசரமும் விண்ணும்படைத்தளித்துநிக்கும்
பராபரன்தன்
வண்ணமலர்ப்பதத்தைக் கண்ணும்பொழுதில் இன்பந்தேக்கு
ஆசையினாலே [ம்
உண்ணும்பொழுதும்வேலை-பண்ணும்பொழுதும்-ஒன்றை
எண்ணும்பொழுதுந்-துன்பம்-நண்ணும்பொழுதுமே (மன)

2. கல்லும்பெருமரமும் புல்லும்புனமுமேசஞ்சாரம்
செய்யுமந்திபோய்
தில்லும்புல்லும்திரியாவரமுஞ் செய்தென்னசாரம்
வெளியிதேதான்
செல்லும்பொழுதும்-வார்த்தை-செல்லும்பொழுதும்-பகை
வெல்லும்பொழுதும்-பின்னும்-அல்லும்பகலுமே (மனமே)

3. அஷ்டதிசையும் ஓடிக் கெட்டலைந்தோம்புவோம்சரீரம்
இருப்பிடத்தை
விட்டகலாமல் தியானநிஷ்டை செய்வதில் என்னபாரம்
பலவியாதி
குஷ்டம்வந்தாலுந்-துரைப்-பட்டம்வந்தாலும்-பெரும்
கஷ்டம்வந்தாலும்-பிறர்-வெட்டவந்தாலுமே (மனமே)

4. கெடுக்கும்பவவினையை ஒடுக்கும்வேதநாயகனுமம்
துயர்வாராமல்
தடுக்கும் இகபரமுங் கொடுக்குந்தினமும் உண்டுக்ஷேமம்
நித்திரைசெய்யப்
படுக்கும்பொழுதுந்-துலகில்-உடுக்கும்பொழுதும் ஒன்றைத்
தொடுக்கும்பொழுதும்-சுகம்-அடுக்கும்பொழுதுமே(மனமே)

இதுவும் அது.

---

144-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இனியாகிலுமனமே-ஐயனை நீ-நினையாயோ தினமே
இகபரசித்திபெறவே (இனி)

அநுபல்லவி

தனியிளம்பருவமுந் தாண்டிப்போனேமே
பனிபோல்வளர்ந்து கிழப்பருவமானோமே (இனி)

சரணங்கள்.

ஆசைக்கொருகுறைப்பு மயிரேனும் இலேயே
ஐயையோகொக்குப்போல் நரைத்ததுதலையே
காசுக்குதவாக்கிழ மென்பதுநிலேயே
கன்னியர்க்கும் இனிநாம் கசக்கும்வேப்பிலேயே (இனி)

கண்கள் இரண்டும் மூக்குக்கண்ணாடிதேடும்
காலூசலாடும் ஓர் கழிபைக்கைநாடும்
தண்கொள்ளும்வேரற்றுத் தந்தங்கள்ஆடும்
தடுத்தாலும்நில்லாமல் யௌவனம்ஓடும் (இனி)

பசிவந்தபின்னெல்லை விதைப்பதுமதியோ
படுந்தாகம்வந்தபின் வெட்டுதல்நதியோ
விசயஞ்செய்திடச்சாகும் காலமேததியோ
வீணையுனக்குக்கெட்டுப் போகச்சம்மதியோ (இனி)

காலந்தனக்கென்ன செய்தோம் அபகாரம்
கணத்தைஆயுசைஅறு தினஞ்செய்யுஞ்சோரம்
மேலும்மேலும் உடலில் விளைக்கும்விகாரம்
வேதநாயகன் சொல்லே வேதாந்தசாரம் (இனி)

---

## 145-இராகம்-சஹானா-ஆதிதாளம்.

பல்லவி.

மறவாதே-கருணும்பரனடியிணை-மறவாதே
மாசிலாதபரனை-நேசக்ருபாகரனை (மறவாதே)

அநுபல்லவி.

நிரந்தரநிராதார நின்மலவடிவினை
நித்யானந்தவாழ்வினை நிகரில்முடிவினை (மறவாதே)

சரணங்கள்.

பஞ்சவேடர்மயலில் தஞ்சமென்றேபுகுந்து
சஞ்சலமாம்பிறவி தன்னில்உவந்து (மறவா)

உலகவ்யாபாரத்தில் உன்மத்தம்போலலேந்து
நலமிலாகுணத்தினை நாடிமதிகுலேந்து (மறவா)

3. சகலசுகுணமலி சாஸ்விதபதந்தள்ளி
பகலந்தகன்போல்துள்ளி பாவந்தனைகையள்ளி (மறவா)

4. நிமைமூடாமல்காக்கும் நிமலநடியைத்தேக்கும்
சுமையாம்பிறவிபோக்கும் சுத்தமனத்தனுக்கும் (மறவா)

5. பாதகம்நிறைவாழ்வை பற்றிமயலோகொள்ளி
வேதநாயகன்குண வியாபகனைத்தள்ளி (மறவா)

---

## துர்க்குணங்களை வெளியிடல்.

146-இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

நெஞ்சே-இந்தநாடெங்குந்தேடினும்
நீசர்நமைப்போலுண்டோ

அநுபல்லவி.

அஞ்சாமல்நாளும் அகந்தைகள்நீடுவோம்
சஞ்சலப்பேயால் தலைசுற்றிஆடுவோம் (நெஞ்சே)

சரணங்கள்.

1. தேகம்உயிர்முதல் யாவையுமேதந்த
தேவன்தனைமறப்போம்-கரு
மேகநிழல்போல் மறையும்பொய்வாழ்வை
விரும்பிஙலந்துறப்போம்
மோகவிகாரத்திலே தடுமாறுவோம்
முன்னொன்றும்பின்னொன்றுமாகப் பொய்கூறுவோம்
ஏகமாய்எங்கும் பிறர்களைத்தூறுவோம்
எப்படிஐயையோ நாங்கரைஏறுவோம் (நெஞ்சே)

2. கோயில்குறுக்கள் ஜெபதபம்யாவும்
கொடுவிஷம்போல் வெறுப்போம்-தினம்
நேயமதாகவே தூயமறைசொல்லும்
நீதிகளைமறுப்போம்
ஆயிரம்பாவம் அடிக்கடிபண்ணுவோம்
அன்னியமாதரை ஆசையாய்எண்ணுவோம்
ஈயாஉலோபகுணத்தையே நண்ணுவோம்
ஏழைபசியோடிருக்க நாமுண்ணுவோம் (நெஞ்சே)

3. உள்ளபடிநமக் கெள்ளளவென்கிலும்
உத்தமந்தான் இலையே-பாவ
வெள்ளம்நிறைந்திடும் பள்ளம்தனிலே
விழுந்துவிட்டோம் நிலையே
வள்ளலைப்போல்வெறு மாயக்கூத்தாடுவோம்
வந்தஎளியர்க்கு வாசலைமூடுவோம்
உள்ளேபகையும் உதட்டன்புங்நீடுவோம்
ஊரை அடித்தே உலையிலேபோடுவோம் (நெஞ்சே)

4. உற்றகலையெல்லாம் கற்றமெய்ஞ்ஞானிபோல்
ஊரைமயக்கிடுவோம்-பழு
தற்றமெஞ்ஞானத்தில் பற்றுதலின்றி
அலையஉடம்படுவோம்
மற்றவரைக்கெடுத்துப் பழிவாங்குவோம்
வாழ்வோரைக்கண்டால் வயறுப்பிவீங்குவோம்
நற்றவஞ்செய்யாமல் நாளெல்லாம்தூங்குவோம்
நல்வேதநாயகன் பாதத்தைநீங்குவோம் (நெஞ்சே)

---

## 147-இராகம்-பியாரு-அடதாளம்.

பல்லவி.

பாழ்மனமேயுன்னைப் போலொருபேதை
பாரில் காணேனே-உள்தந்தரம்
பற்றும் வேணேனே (பாழ்)

அநுபல்லவி.

வாழ்நாளனைத்தும் வீணிற்கழித்து
மமதைப்பூண்டாயே தினம்
சூழ்ந்துமேகொல்லும் பஞ்சவேடரின்
சினத்தி னீண்டாயே வழுவி
தீதில் மாண்டாயே ஐயோ (பாழ்)

சரணங்கள்.

1. பொய்க்குருக்கள்போல் போதனைச்செய்து
புகழ்ச்சி கொண்டாயே உனக்குள்
புந்தியைநிலை நிறுத்தாமலேவீண்
புன்மையில் நின்றாயே மாய்கை
போக்கிஞயோ பேயே ஐயோ (பாழ்)

வள்ளலுக்குநிக ரெனபொய்மொழி
வசனித் தாட்டுவாய் ஞான
வாக்கியந்தனை பலர்க்குமூட்டியும் வீண்
வழியில் பூட்டுவாய் குணம்
மாறியெனை யோட்டுவாய் ஐயோ (பாழ்)

3. எண்ணித்தொலைபா பாவஞ்செய்யினும்
எங்கிநினைக் கிலையே தனத்தால்
இருமாப்பினைக் கொண்டலைந்தென் றும்
எங்கு மலைந்தாயே உனைப்போல்
எவருளர் சொல்வாயே ஐயோ (பாழ்)

4. யாவுந்தந்தாள் பரனடித்தொழ
யாதும் கருதிலையே புல்லர்மேல்
பாவியசைத்துப்பாடி எக்களித்துக்கொண்ட
பாவமோ மலையே இதற்கு
பரிதாப மிலையே ஐயோ (பாழ்)

5. தீதிலாதசின் மயப்ரமாணந்தம்
தேடிபணிந் திலையே ஞான
வேதநாயகன் மனங்கமழ்தேவை
வேண்டிநினைந் திலையே பவமற
விரும்கனிந் திலையே ஐயோ (பாழ்)

---

## மனமயக்கந் தவிர்த்தல்.

148-இராகம்-எதுகுலகாம்போதி-அடதாளசாப்பு.

பல்லவி.

நீமலைக்காதே நெஞ்சே-நீமலைக்காதே

அநுபல்லவி.

நேசத்துடன் ஐயன்-நாமத்தைப்போற்றிடில்
க்ஷேமத்தைக்கொள்ளுவோம்-காமத்திலேசிக்கி (நீமலை)

சரணங்கள்.

1. மோகத்தையும்அவி வேகத்தையும்
போகத்தையும்உத்தி யோகத்தையும்

2. ஆட்டையும்மந்தையின் மாட்டையுங்கட்டிய
வீட்டையுமுன்கட்ட கேட்டையுமெண்ணி (நீமலை)

3. கீச்சுக்கீச்சென்றிடும் மூச்சுப்போனால்ஒரு
பேச்சுக்காகாமலைப் பிச்சுக்குழல்நம்பி (நீமலை)

4. நாட்டைக்கொள்ளையிடும் வேட்டைக்காரன்நமன்
காட்டைக்கலைத்துயிர்க் கூட்டைக்கொள்வான்ஐயோ (நீமலை)

5. கேட்டைத்தருஞ்சோற்று மூட்டைதனைஒன்ப
தோட்டைப்பாண்டத்தைக் கற்கோட்டையெனநம்பி (நீமலை)

6. கொண்டையிலேரத்நத் தண்டையிலேவிழிக
கெண்டையிலேமதன் சண்டையிலேசிக்கி (நீமலை)

7. சேலையென்றும்முத்து மாலையென்றும்தினம்
வேலைகொள்ளும்பெண்கள் காலைத்தழுவியே (நீமலை)

8. சொத்துதமக்கென்று கத்துவதன்றிஆ
பத்துக்குதவாத புத்திரரைநம்பி (நீமலை)

9. தாயகனைவேத நாயகனைவிட்டு
மாயவலைபட்டுத் தூயநெறிகெட்டு (நீமலை

---

## நற்புத்திகூறல்.

149-இராகம்-சுருட்டி-திரிபுடை.

பல்லவி.

போனதுபோகட்டும் நீஇனியாகிலும்
புத்தியாய் வாழ்மனமே

அநுபல்லவி.

ஞானமில்லாத நடக்கையைத்தொட்டாயே
நம்பினஎன்னை நட்டாற்றிற்கைவிட்டாயே (போனது)

சரணங்கள்.

1. எத்தனைநாள் இருந்தாலும்-ஒருநாள்
இறப்பது சத்தியமே-அப்போ
தென்னவருப்புண்ணிய பாவம்அல்லாமல்மற்
றெல்லாம் அநித்தியமே
பித்தஉடம்பை வளர்த்திடச்செய்கிறாய்
பிரேதவயித்தியமே-என்றும்
பேதமில்லாப்பரன் பாதம்பணிந்தோர்க்குப்
பேரின்பம் சாசித்தியமே

பத்தர்சங்கத்தைநீ நித்தம்பிரிந்தாயே
பங்கப்புரிந்தாயே எங்குந்திரிந்தாயே (போனது)

2. தன்றாரம்அன்றிப் பரதாரந்தாய்க்குச்
சமானம்இதுதேரே-கெட்ட
தாசியைக்கண்டால் நமஸ்காரஞ்செய்துநீ
தப்பவழிபாரே
இன்றுநாளையென்று நாள்போக்காமல்வினை
இக்ஷணமேதீரே-பின்னும்
எந்தஉயிரையும் சொந்தஉயிரென
எண்ணித்தயைகூரே
என்றுப்பணப்பேய் தனைநீகும்பிட்டாயே
எச்சுக்குட்பட்டாயே சீச்சிநீகெட்டாயே (போனது)

3. நாதனைப்பேசிடும் நாவினால்அற்ப
நரஸ்துதிபாடாதே-நாளும்
நானெனதென்றபி மானம்பிடித்துநீ
நாடெங்கும் ஓடாதே
சாதகபாதகம் என்னவந்தாலும்
தவம்விடக்கூடாதே-கோடி
தர்மம்உனக்குண்டு கர்மம்வினைக்கும்
தனத்தினைத்தேடாதே
போதவேதநாயகன் தாள்விடுத்தாயே
பொன்னை அடுத்தாயே என்னைக்கெடுத்தாயே (போனது)

---

## நித்தியானந்தந்தேடல்.

### 150-இராகம்-ஹிந்துஸ்தான்-காப்பி-ஆதிதாளம்.

பல்லவி.

நித்தியானந்தத்தைநாடு-பர
நின்மலசுகந்தேடு-மனமே (நித்தியா)

அநுபல்லவி.

சத்தியமார்க்கந் தனிலேகூடு
சற்சனசங்கத் துடன்உறவாடு (நித்தியா)

சரணங்கள்.

1. இந்திரஜாலம் உலகவைபோகம்
இன்றைக்கிருப்பதுவோ சந்தேகம்
அந்தரமின்னல்போல் அழியும்தேகம்
ஐயோ அதனுடன் உனக்கென்னஸ்நேகம் (நித்திய)

2. தனதானியமுத லானசம்பத்து
சாசுவதமோ அதற் காயிரந்தத்து
தினமுங்கவலை விளைத்திடும்வித்து
சீச்சீ அதனை விரும்பல்விபத்து (நித்திய)

3. மெய்யேலன்றக்கும் உதவாப்பண்டம்
மிருகாதிகள்சூழ் மாமிசக்கண்டம்
பொய்யோ இதற்கிங்கு நித்தியகண்டம்
புண்ணியஞ்செய்யுனக் காயிரந்தண்டம் (நித்திய)

4. காண்பதெல்லாம்நிலை யல்ல அநித்தியம்
காயம்இறங்கிட வேண்டும்அகத்தியம்
வீண்பெருமாள்மீதுனக் கென்னபைத்தியம்
வேதநாயகன் சொல்லேசத்தியம் (நித்திய)

---

151-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநான்-சொல்வதைக்கேள்-வீண்
மாயச்செறுக்கினிலே-மலைந்துகுலைந்துகெட்ட
மனமேநான்-சொல்வதைக்கேள்

அநுபல்லவி.

கனகநிகராயுன்னை காட்டியேமறைகிறாய்
காலம்கழித்துப்பொய்கண் கட்டுவித்தைசெய்கிறாய்
சினமதுமிகுந்துவீண் செய்கையிலுழல்கிறாய்
தெய்வதாபக்திமை சிந்தியாதலைகிறாய்
சீச்சியுதவாது இதிலென்னசுகம்
மூச்சுப்போமுன்னேது தெய்வவிஸ்வாஸ
கள

பேச்சைப்பயிலாதேது முடிவிலொன்றும்
ஆச்சர்யமிலேவாது இருதுணராமல்
அலேந்துமதிகுலேந்து-நிலேதவறியுழலும் (மனமே

சரணங்கள்.

1. காரணங்கடந்துநின்ருயே கணக்
கடங்காதீமைசெய்தாயே கடையில்விழிப்பாய்நீயே
கருத்தறியாதேன்பேயே
தாரணிமுழுதினும் ஆண்டிடநினேந்தாய்
தகைவிலாகுணத்தில் தழைத்துநீநனேந்தாய்
ஆரணநெறியெல்லாம் அறிந்தார்போல்குனிந்தாய்
அற்பமும்தெரியாமல் அறியாமல்பணிந்தாய்
ஐயோ இதென்ன நன்மை இதையறிந்தால்
மெய்யாகஎதுதின்மை வீணில்மயங்கி
செய்தாயேகோடிவன்மை ஆர்க்குதானேற்றும்
நெய்தாய்பவங்கள்பன்மை இனிதுணர்ந்து
நிமலனடிதுதிப்பாய்-விமலகுணங்கதிப்பாய் (மனமே)

2. செய்வதெல்லாம் டலதந்த்ரமே-உனது
சிந்தைகளியாவும்வீணே ஜெனித்தாய்பூவினில்தானே
தெரியாபடிப்பாய் மந்த்ரமே
ஐவர்நிறைந்தகாட்டை அருமலேயெனவெண்ணி
ஆசைபூண்டலேந்தாயே யதிருலேதினங்குண்ணி
வையகத்தாசையில் மலேத்தனேயேபண்ணி
மாசற்றவெளியினில் மகத்வனேநிதமெண்ணி
உய்யும்வகையைத்தேடு உன்னே
உணர்ந்தால்சுகமோநாடும் இது
மெய்யல்லபொய்கூடு நம்பும்
வீணர்க்குமுமலஓடு இதை
விட்டுமதியைநாடு-விபூதர்வாழ்வினில்நீடு (மனமே)

3. எத்தனேஉனக்குபோதிப்பேன்-இருது
எவ்வினையினேகெடுக்கும் இன்பவழியில்விடுக்கும்
எத்தகைமையாக சாதிப்பேன்
பித்துபிடித்தலேந்தாய் பேதைகுராங்கே
பிரபஞ்சவாழ்க்கையிற் சுகமுண்டோ திரங்கே

அத்தனைப்பணிந்திட வாசைகொண்டிரங்கே
அற்பபாவங்களுனை யணுகுமுன்னுரங்கே
சுத்தனடியோசீலம் மாய
சுகத்திலேதனுகூலம் ஞான
பத்தரின்மறைமூலம் படித்தால்
பயனும்ஞானத்தின்பாலம் ஆதலால்
வித்தகன்கழலோசொந்தம்-வேதநாயகன்சொல்லந்தம் (மன)

---

152-இராகம்-யமுனகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நித்தியாநந்தமேசொந்தம்-இதை
நினையார்க்குமுடிவில்-நிர்ப்பந்தம்
நிகரிலாபரம்பொருளி-ணையினைதினந்தொழு
நிபுணர்ப்பராவும்ஞான-நிமலன்பாதத்திற்கழு (நித்தி)

அநுபல்லவி.

பத்தர்மனம்பரவும் பகரொணுமயனை
பாலித்தநுண்மலியும் பாக்கியமாநயனை
சத்தசாகரமியாவும் தந்தவிற்பயனை
சதானந்தபூர்ணந் தருநும்பொற்புயனை (நித்தி)

சரணங்கள்.

1. உலகஞ்செய்திதோ மாயமென்றுரைப்பாய்
உத்தமர்பணிபதம் உசிதத்தால்நிறைப்பாய்
நலம்புரும்வகையினில் நாடியேகறைப்பாய்
நாடோறும்பகவானை நம்பிமயலைமறப்பாய் (நித்தி)

2. காமக்குரோதமதத்தை காட்டாமலடிப்பாய்
கர்த்தவ்யன்கழலுக்கே காலத்தைமுடிப்பாய்
க்ஷேமந்தனைவேண்டிடா தீயர்முன்நொடிப்பாய்
திவ்யரசக்யமுதை தேடியேகுடிப்பாய் (நித்தி)

3. பொல்லாமயலனைத்தும் புறம்பேநீதள்ளு
புனிதமெஞ்ஞானநெறி போற்றியுட்கொள்ளு
நில்லாகடங்கனை நிசமலவென்றெள்ளு
நிபுணர்பணிந்தநிலை நீபெறநுள்ளு (நித்தி)

4. பாவவழியகன்று பத்தியில்தேரு
பரமானந்தசந்தோஷம் பார்க்கவேகோரு
ஆவல்நிறையுலக நித்யமதைபாரு
அல்லாமல்கதிவேறு யிலையெனமீரு (நித்தி)

5. பாதகஞ்செய்யாத வகையதுநீதம்
பரவசங்கொண்டா லுண்டுசுகாதீதம்
வேதநாயகன் விளம்பினதுநற்போதம்
விதமறிந்தவர்க்கு என்வேறொருவேதம் (நித்தி)

---

## கள்ள ஞானம்.

---

153-இராகம்-இந்துஸ்தான்-காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

புண்ணியம்போல்-பாபம்-மனமே
புரிந்தோம்நாம்-தினமே (புண்ணிய)

அநுபல்லவி.

திண்ணமாகக்குளிக்கப் போயுந்தன்மேலே
சேற்றைப்பூசிக்கொண்டு திரும்புதல்போலே (புண்ணியம்)

சரணங்கள்.

1. கையிலேநாம்பிடிப்பது ஜெபமாலை
கக்ஷத்தில்வைப்பதுவோ கன்னக்கோலை
மெய்யாகத்தினம் படிப்பதுதர்மநூலை
மேலுமேலும்நமக்கு துன்மார்க்கவேலை (புண்ணி)

2. ஒருபெண்வேண்டாமென்றுகொள்வோம்சந்நியாசம்
ஊரில்உள்ளபெண்கள் மீதெல்லாம்நேசம்
பருகப்பசியில்லாத போதுபவாசம்
பசித்தால்ஒருபானை பருக்கையும்நாசம் (புண்ணி)

3. கடவுளைதுதிப்பது போல்வாய்பாடும்
கண்ணுங்கருத்துங்கண்ட இடமெங்கும்ஓடும்
திடமாகக்கோயிற்குள்ளே தேகம்போய்கூடும்
சிந்தனைவெளியிலே திரிந்துதிண்டாடும் (புண்ணி)

## பொருளாசையொழித்தல்.



### 155-கனவவசந்தம்-ஆதிதாளம்.

பல்லவி.

பொருளைவிரும்பவேண்டாம்-மனமே
பொருளைவிரும்பவேண்டாம்

அநுபல்லவி.

ஒருவரிடமும்நில்லா தூரெங்கும்பறக்கும்
திருவேதநாயகன் சேவடிமறக்கும் (பொருளை)

சரணங்கள்.

1. பணமுள்ளவர்க்கு நமன்பயப்படுவானோ
குணமுடன் அவர்களைக் கும்பிடுவானோ (பொருளை)

2. தனவான்களைத்துயர் சாரஅஞ்சிடுமோ
கனசுகம்அவருடன் கலந்துகொஞ்சிடுமோ (பொருளை)

3. பார்க்கவொட்டாமலே பார்வையைக்கெடுக்கும்
வார்த்தைசொல்லாமலே வாயையுந்தடுக்கும் (பொருளை)

4. மண்டலத்தில்நமக்கு வயிறொருகுதியா
கண்டபடி உண்ண காம்கபந்தனுக்கெதிரே (பொருளை)

5. ஊரில்நம்மிருப்பிடம் ஒருமுழமட்டே
பாரிலேநமக்கேன் பலமனைக்கட்டே (பொருளை)

6. உலகில்வயிறுநமக் குள்ளதுசாணே
மலைமலையாக்குவித்து வைக்குதல்வீணே (பொருளை)

7. சங்கையில்லாமற் பணந்தலைவெட்டும்ஒருவாள்
தங்கைவருவாள்பின்பு தமக்கையும்வருவாள் (பொருளை)

8. வித்தாரமாகப்பொருள் வேண்டுதல்தாழ்வு
செத்தால்தெரியுமே செட்டியார்வாழ்வு (பொருளை)

9. அருளுடன் ஏழைக் குதவாப்பணம்தணமே
பொருள்அதைக்குழிவெட்டிப் புதைக்குதல்குணமே(பொரு)

10. பூதமானாலும்உண்ணப்போதுமாகாணி
ஆதலால்நமக்கேன் ஆயிரங்காணி (பொருளை)

11. கெண்டைக்சேலைக்காரிதான் கிழவியாகாளோ
கொண்டைப்பூமுடிந்திடும் குமரியாகாளோ (பொருளை)

12 வெறுங்கழுத்தாயிருந்தால் விக்குமோதொண்டை
உறுந்தலை அணிபோல் உடையுமோமண்டை (பொருளை)

13. கடுக்கன் இல்லாவிட்டால் காதுகள்நீளாதோ
உடுப்புகள் இல்லாவிட்டால்உடம்புநீளாதோ (பொருளை)

14. கந்தலைஅணிந்தவள் கர்ப்பம்ஆகாளோ
விந்தைநகைஉள்ளவள் மெலிந்துபோகாளோ (பொருளை)

15. பொருந்தச்செலவிடாமல் புதைத்திடும்பணமே
இருந்தென்னபோயென்ன இதில்என்னமணமே (பொருளை)

16. நிதிவெள்ளியாதிகள் நிச்சயம்பண்ணே
புதையல்தன்னினமென்று புசிப்பாள்மண்பெண்ணே (பொரு)

## செல்வச் செருக்கு.

---

156-இராகம்-தேவமனோஹரி-ஏகதாளம்.

பல்லவி.

வீண்கர்வம் என் மனமே உனக்கு
வீண்கர்வம் என் மனமே

அநுபல்லவி.

காண்பொருள்சகலமுங் கடவுள் ஆதீனம்
கனதொண்டமானுந் தோட்டியுமேசமானம் (வீண்)

சரணங்கள்.

1. நம்முடன்பிறந்ததுண்டோ உத்தியோகம்
நமக்குமுன்னே அதுபலர் அநுபோகம்
அம்மஅதற்குக் காத்திருப்பார் அநேகம்
அனைவர்க்கும்உண்டு ராஜஸெதய்வீகம் (வீண்)

1. தாசிகள்போல்செல்வம் பலருடன் கூடும்
தனமிருந்தஇடத்தில் தரித்திரம்நாடும்
கூசாமல்பானையைக் கொசுகுமேசாடும்
குப்பைஉயர்ந்து கோபுரத்தையுமூடும் (வீண்)

4. ஆனதலையில்வளர்ப்பது ஜடைமுடியே
அனுதினமும்கெடுப்ப தாயிரங்குடியே
தானம்பிறர்அறியக் கொடுப்பதோர்கொடியே
தனியேவந்தவனுக்குத் தான்தடி அடியே (புண்ணி)

5. அடித்திடும்கொடுமையிற் புலிக்குநாமேலே
ஆகையினால்ஆசனம் புலித்தோலே
கடித்திடும்குரங்கு நாம்சேஷ்டையினாலே
நமக்குள்ள குறைவு பின்புறத்தொருவாலே (புண்ணி)

6. அங்கமெல்லாங்கரு மேகவியாதி
அதனைமறைக்கமெய்யில் அணிவோம்விபூதி
நங்கையாள் இல்லாப்பொருள் மனையாதி
நாம்துறந்தோம்நல்ல துறவறநீதி (புண்ணி)

7. ஏகஅன்னம்தள்ளிப் பிடிப்போம் ஒருசந்தி
இதரபக்ஷணங்களால் நிறைப்போம்தொந்தி
தேகபலம்ஒடுங்கில் விரக்தியாம்பிந்தித்
திடமானால்நம்செய்கை சிரிக்குமேசந்தி (புண்ணி)

8. உள்ளத்தின் அழுக்கை எந்நாளுமேகழுவோம்
உடலைக்கழுவநீரில் அடிக்கடிவிழுவோம்
கள்ளத்தனமாகச்சந் நிதிமுன்னே அழுவோம்
காசுக்குநாயையும் கைகட்டித்தொழுவோம் (புண்ணி)

9. பசியில்லாதவர்க்குச் செய்வோம்அன்னதானம்
பசித்துவந்தோரைச் செய்வோம்அவமானம்
சுசியாகப்பிறர்க்குப தேசிப்போம்ஞானம்
துர்க்குணகடலிலே தினஞ்செய்வோம்ஸ்நானம் (புண்ணி)

10. பெருமையாயணிவது காவிவஸ்திரமே
பிரதிஷ்டைசெய்வது தர்மசத்திரமே
பரவியநமது துர்க்குணம்சமுத்திரமே
பாடோம்வேதநாயகன் சத்திரமே (புண்ணி)

---

154-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

புண்ணியம்போல்பாபம்மனமே-புரிந்தனையேதினமே
புகழிதிலுண்டோ-மனமே

புகழ்ச்சியும் இகழ்ச்சியும்-பேதமறியாமலே
அகந்தையிலிறுமாப்புற்றலைந்தாய்தெரியாமலே (புண்)

அநுபல்லவி.

கன்மவசத்தினாலே காலந்தனையறிந்து
கருத்தறியாதலைந்து கரணம்புண்ணாய்பரிந்து

சரணங்கள்.

1. ஒன்பதுவாசலும்ஊத்தை இதைமறுத்திடவாசனை
ஊட்டிவைப்பாயேசோத்தை

ஒளியிருந்துமந்தகன் போலலைவாயேசட்டை
ஒன்றுக்குதவாத உசிதமில்மண்கோட்டை-ஒன்

எண்ணிக்கையில்லாமல் நல்லோர்க்கிடரென்றுமேபுரிவாய்
ஏதுமிலர்க்குதுரோகம் எந்நாளுஞ்செய்துதிரிவாய் (புண்)

2. வையகத்தோர்காணநீர்பூசுவாய் வாயிலோஹீனசொற்களை
வழுத்திமலைத்துபேசுவாய்

கையில்செபமாலைகொண்டகம்வேறேசொல்லுவாய்
கழுத்தில்ஆரங்கள்பூண்டே கட்டுகதைபுல்லுவாய்-வைய

துய்யஞானக்குழுகுமென்று சொல்கட்டியேபுகட்டி
தூயநெறிபோல்கெடுப்பாய் தொகையாயிரம்புகட்டி (புண்)

பசியில்லாதோரைஅழைப்போம் பசித்தவரைவெருட்டிமிகப்
பாதகஞ்செய்தே பிழைப்போம்

பரணின்நாள்ஒருபோது என்றுசொல்லியேபசித்தால்
பானைசோத்தையுமுண்டு பந்தடிப்போம்நிசத்தால்

விசனித்தோர்கள்தன்னை வேசாறிபல்கடிப்போம்
வேதநாயகன்சொல்லை வேண்டாதுயிர்மடிப்போம் (புண்)

3. கனவில்கண்டகத்திரிக்காய் கறிக்காமோ
கல்லால் இரும்பால்காயங் கொண்டோமோ
தினம் அசையாமல்மண்ணில் வேர்கொண்டநாமோ
இனந்துநாம்சபித்திடில் திசையெல்லாம்வேமோ (விண்)

4. தம்பொருளென்பர் மனைவியர்மைந்தர்பேரர்
தப்பினல் விடுவரோ தாயாதிக்காரர்
வெம்பிச்சமயம் பார்த்திருப்பார்சோரர்
மிச்சத்தைசுருட்டுவார் மேல் அதிகாரர் (விண்)

5. இடையிற்கோவணமின் றிப்பிறந்தோமெய்யே
இறந்திடுங்காலத்தும் நாம்வெறுங்கையே
உடைமைநமதுசொந்தம் என்பதுபொய்யே
ஊரார்பொருளைநாம் சுமந்தோம் ஐயே (விண்)

6. ஜெகமுழுதும்நமக்குச் சர்வமானியமா
சிந்தித்தகாரியம் எல்லாம் ஜயமா
சுகதுக்கபேதம் இல்லாதிவ்யமயமா
துஷ்டன் இயமனுக்கு நமைக்கண்டால்பயமா (விண்)

7. நீடுந்தங்கையுந் தமக்கையும் அதிநேசம்
நிதமுங்கைம்மாறிக் கொள்வார் அவர்வாசம்
சூடுண்டமாடுபோல் துள்ளல் ஆபாசம்
துள்ளினமாடுபொதி சுமக்கும்பிரகாசம் (விண்)

8. தாய்வயிற்றில் இருந்து ஜனித்திட்டபோது
சட்டைதலைப்பாகுடன் நாம்வந்ததேது
மாயப்பிரபஞ்சத்தின் வாழ்வெல்லாஞ்சூது
மாவேதநாயகனை மறக்கவொண்ணாது (விண்)

157-இராகம்-தன்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமே உனக்கு-ஏன்கர்வம்-முடிவில்
வாய்த்திடுமோசொல்-தர்மம்-பாழ் (மனமே)

அநுபல்லவி.

கனவிற்கண்டவூமையின் கதைபோல்முடியும்வாழ்வு
கனமலையெனநம்பி காலங்கழித்திடில்தாழ்வு

சரணங்கள்.

1. பொருளதுவும் மலையாமே -நம்பிடில்
புறைதவிர்த்திடும் நிலையாமோ

கருணைம்பரசுகுண கர்த்தவ்யனடி தினம்
கவனியாதலைந்தாயே காதகமுப்பகைமுனம்
தருணமறிந்துவரும் தகைவிலா எமனின்சினம்
தணித்திடலாகுமோ சஞ்சலநிறைகன (மனமே)

2. அத்திபைகொசுகுசாடிடுமே-உனது
அவபக்தியாவும் பொய்யாய்விடுமே

சத்தசாகரம்யாவும் தந்தருள்செய்காரண
சருவாநுக்ரஹகுண சாஸ்விதனும்பூரண
அத்தனடிநினையா தகந்தைபூண்டாய் ஆரண
அந்தரங்கமறந்து அலைந்தனையேஹீன (மனமே)

3. மோகப்பிணியதிலே நிலைத்தாய்-உன்னை
முழுதுணராமல் காலங்கழித்தாய்

யோகஉத்தியோகமென முற்றினும்வாடி
போகவத்தியாயத்தில் மலைத்தனைநாடி
தேகம் நிலையென்றெண்ணி தீங்கினுல்கோடி
செருக்கினிலுழன்றாயே திறமென்னநீடி (மனமே)

4. உண்டாகில்வருவார் பற்சுற்றம்-அதனை
உரைப்பதற்கியல் புண்டோசீற்றம்

கண்டவுடன்பணிந்து காலைக்குப்பிடுவார்
காசிலாவிடிலோவீண் கதைபுகன்றிடுவார்
அண்டர்க்கும்விசிதமாய் ஆசீர்கூறிடுவார்
அனியாயமிதைக்கண்டு அகந்தைகொண்டிடுவார் (மனமே)

5. தீதநிறைந்தலைந்தாயே-உனது
செய்கையனைத்துணரில் மாயே

போதனைசக்தியை போக்கடித்திடுவாய்
பொல்லாபஞ்சவேடரால் பொழுதைநோக்கிடுவாய்
வேதநாயகன்சொல்லை விடிலோநீகெடுவாய்
விமலனடிமறந்தால் வேதையுட்படுவாய் (மனமே)

## உலகவாழ்வை வெறுத்தல்.

——()——

158-இராகம்-ஹிந்துஸ்தான் காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

வாழ்வைநம்பாதே-மனமே-வாழ்வைநம்பாதே.

அநுபல்லவி.

தாழ்வில்லாத நமதுஸ்வாமி
தாளைத்தேடுபாடு பூமி (வாழ்வை)

சரணங்கள்.

1. தேகமாம்ஸ மூட்டை பல
ஜெந்துவுக்கும்நல்ல வேட்டை அதில்
ஓமோ அனந்தம் ஓட்டை உயிர்
ஓடிட எத்தனை பாட்டை இந்த(வாழ்வை)

2. இன்றைக்காளுவார் நாடு நாளை
எடுப்பார்கையிலே ஓடு உடல்
ஒன்றுக்குதவாத கூடு இதை
உற்றுப்பார்த்தால் வெட்கக்கேடு புவி(வாழ்வை)

3. பெண்டுபிள்ளைக் கென்னவாட்டம் நம்மைப்
பிடுங்கித்தின்பதில் நாட்டம் கையில்
உண்டாகும்போது கொண்டாட்டம் செல்வம்
ஒய்ந்தால்சகலரும் ஓட்டம் புவி(வாழ்வை)

4. இந்த உலகத்திற் பிறந்தார் முன்னம்
எத்தனையோபேர்கள் இறந்தார் பெற்ற
தந்தைதாய்பாட்டரும் பறந்தார் நாளு
தாரங்கள்போய்நம்மை மறந்தார் புவி(வாழ்வை)

5. இன்றுபல்லக்கினிற் போவார் நாளை
எடுக்கும் ஆள்களும் ஆவார் நரர்
என்றவர் யாவருஞ் சாவார் மதி
ஈனர்நரகத்தில் வேவார் புவி(வாழ்வை)

6. கூத்தில்அரசனைப் போலே வேஷம்
கொண்டவர்க்குண்டோ செங்கோலே புவி

சாத்தியநாடக சாலை அந்தச்
சாலையில்நாம் எந்தமூலை இந்த(வாழ்வை)

7. வண்டியும் ஓடத்தில் ஏறும் ஓடம்
வண்டியில் ஏறும் நாள்தோறும் நாம்
கொண்டபொருள் கைம்மாறும் வேதம்
கூறுஞ்சொல்லே நிறைவேறும் புவி(வாழ்வை)

8. எண்ணிக்கையில்லாமல் இங்கே முன்னம்
இருந்தவரெல்லாம் எங்கே நாமும்
நண்ணிப்போகவேண்டும் அங்கே வேத
நாயகன்பாதம் நம்பங்கே புவி(வாழ்வை)

159-இராகம் கனகவசந்தம்-ஆதிதாளம்

பல்லவி.

நம்பாதே-வாழ்வை-நம்பாதே-நெஞ்சே
நம்பநடிபோற்று - வேத
நாயகன் துதியை சாற்று
நாளும்கொண்டேற்று (நம்பாதே)

அநுபல்லவி.

வெம்பிதினமும்வாடும் வேதைமலிந்துகூடும்
வம்புநிறைந்துநாடும் மயங்கிமுடிவில் ஓடும்
வாதுமுழுதும்சூது-இது
தகாதுவீண்மயலிது
சுகம்பெறவே ஓது (நம்பாதே)

சரணங்கள்.

1. ஐம்புலர்கூடியவீடு அநித்தியவூத்தைக்காடு
ஐயோயிதின்பற்பாடு அழிந்திடும் ஓட்டை ஓடு
பொய்யால்வந்ததிது-வீண்
புரணிபூண்டதிது
போகுங்கால் சொல்லாதிது (நம்பாதே)

2. எத்தனைபேர்களோஜனித்தார் எல்லாருமெங்கேயொளித்தார்
சித்தமொடெங்கெங்கேளித்தார் சிறிலாதென்றேதொலைத்தார்

சித்துநிறைந்ததிது-மாய
பித்துபிடித்ததிது
சத்துபோனால் தெரியுமிது (நம்பாதே)

மண்டலிகர் இருந்தாரே மாய்ந்துமாய்ந்து ஒடுங்கினாரே
கண்டபடி திரிந்தாரே காலங்கழித்து

கண்கட்டுவித்தையிது-மின்ன
புண்பட்டுவந்ததிது
துண்புற்றுழல்வதிது (நம்பாதே)

எண்சாணிதுகோட்டை எக்காலத்தும்மிருகவேட்டை
நண்பிலாதவீட்டை நம்பிடில்வருங்கேட்டை

நாயகனடிசொந்தம்-வேத
நாயகன்பிரபந்தம்
நானுந்துதிஅந்தம் (நம்பாதே)

---

## உடலை வெறுத்தல்.

---

### 160-இராகம்-இந்துஸ்தான்காபி-ரூபகதாளம்.

பல்லவி.

உடலைநம்பாதே-மனமே (உடலை)

அநுபல்லவி.

குடலுந்தசையும் எலும்பும்நரம்பும்
கொழுத்துப் புழுத்துநிரம்பும் (உடலை)

சரணங்கள்.

இந்திரியம்மலமூத்திரம்—தசை
இரத்தம்நிறைந்தபாத்திரம்—பாச
பந்தப்பேய்வளர்க்ஷேத்திரம்—வெறும்
பவந்தநாடக சூத்திரம்—இந்த (உடலை)

ஆசைப்பட்சியின்கூடு—பல
அசுத்தஞ்சேர்குப்பைமேடு—இதை
ஏசிப்போபோவென்னும்வீடு—கிட்ட
எட்டிவாவாவென்னுங்காடு—இந்த (உடலை)

3. கண்ணிற்பீளைகள்வடியும்—இரு
காதிற்குறும்பிபடியும்—சனி
வண்ணமூக்கில்வந்திடியும்—நல்ல
வாயும்எச்சிலாய்முடியும்—இந்த (உடலை)

4. பயனின்றிவிழும்மட்டை—கொடும்
பாம்புகழற்றுஞ்சட்டை—போலே
உயிர்போனால்வெறுங்கட்டை—இதை
உற்றுப்பார்த்தால்லொடலொட்டை—இந்த (உடலை)

5. காகம்நாய்நரிக்கூட்டம்—பல
கழுகுக்கும்நல்ல ஊட்டம்—கரு
மேகநிழலபோல் ஓட்டம்—இது
மெய்யல்லப்பொமமலாட்டம்—இந்த (உடலை)

6 எத்தனைபேர்புவியாண்டார்—அவர்
எல்லவருமுன்னே மாண்டார்—இங்கே
செத்தவரில் எவர்மீண்டார்—தெய்வ
சித்தம்ஒருவருந் தாண்டார்—இந்த (உடலை)

7. மோடியேன் ஒருக்காலே—உடல்
முழுதும் எலும்புந்தோலே—அதில்
நாடி ஒடுங்கினாலே—பின்பு
நமக்கிங்கே என்னவேலை—இந்த (உடலை)

8. கணவன்தெய்வமென்பாள் பாரி—அவள்
காரியத்திற்கெட்டிக்காரி—செத்த
பிணமுன்வருவாளோநேரில்—சுகம
பிரிந்ததற்கல்லோ ஒப்பாரி—இந்த (உடலை)

9. கிருமிகட்குபகாரணம்—தசை
கிழிந்துவடியும் இரணம்—சிறு
கருமமேற்கொள்ளுந்திரணம்—இது
கரணந்தப்பினால்மரணம்—இந்த (உடலை)

10. வேதநாயகன்கூறும்—சொல்லை
மீறினால்நலமாறும்—பல
காதந்துர்க்கந்தம்மாறும்—பித்தம்
கபமலஞ்சலம் ஊறும்—இந்த (உடலை)

———

## 161-இராம்-கமாசு-ரூபகதாளம்.

பல்லவி.

உடலைநம்பாதே-என்மனமே
உடலைநம்பாதே

அநுபல்லவி.

புவியோர்புகழ்ந் தேற்றுங்கனத்தால்
மடமையாய்நம்பி வாழும்சினத்தால் (உடலை)

சரணங்கள்.

1. சீழும்நிணந்தானே-இதில்
சேர்ந்ததெல்லாம்வீணே

பாழாம்கடமதைப் பற்றிச்சுகமுண்டோ
வீழ்ந்தவுடன்நரிநாய் விழுங்கதடையுண்டோ (உடலை)

2. மூத்திரமிந்திரியமே-இதினால்
முற்றுமாதந்த்ரமே

காற்றும்பஞ்சகருவி சரிந்திடும்நாற்றமே
சாஸ்விதமாய்நினைந்து சாவதுமாத்ரமே (உடலை)

3. பறவைக்கேவேட்டை-உற்றுப்
பார்க்கினில்மண்கோட்டை

பிறந்துமிறந்துப் பிணியதேசேட்டை
பிரபஞ்சவாழ்க்கையில் பேசில்நவஓட்டை (உடலை)

4. நாறும்சமுத்திரமே-இதை
நம்பினித்தியமே

பீறுமலசலம் பீற்றற்றுறுத்தியே
பேசாமலோடுங்கால் பின்னென்னசித்தியே (உடலை)

5. தீதுநிறைக்குணமே-காற்று
செயல்முடிந்தால்பிணமே

வேதநாயகன் விளம்புதலுண்மையே
விற்பன்னவாக்கினை யுணர்ந்திடினன்மையே (உடலை)

---

## பணதூஷணை.

---

### 162. இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பணமேஉன்னால் என்னகுணமே-தண்டம்
பண்ணினேன் சற்றும்-என்கண்ணின்முன்னில்லாதே (பண)

அநுபல்லவி.

மணமில்லாதமத மோகங்குரோதந்துன்
மார்க்கமூர்க்கமும் யார்க்குமேபோதிக்கும் (பண)

சரணங்கள்.

1. தேடிஉனைவைத்து மூடியவர்க்குநீ
தீர்க்காயுசுதருவாயோ-இனி
நாடியமன்வந்து சாடும்போதுநீ
நானென்று முன்வருவாயோ

கூடியபேர்களை குடியைக்கெடுப்பாயே
கொல்லச்சொல்லிப்பின்னுங் காட்டிக்கொடுப்பாயே
ஓடிஓடி அற்பரைப் போயடுப்பாயே
உத்தமரைக்கண்டால் ஓட்டமெடுப்பாயே (பணமே)

2. மத்தியில்உன்னைப் படைத்தகல்லால்முன்
வரும்போதுகூடவந்தாயோ-இஷ்ட
சித்தியும்சத்தியும் நித்தியங்கைகூடச்
சிலாசாசம் நீதந்தாயோ

புத்தியிருக்கும் இடம்விட்டுநீங்குவாய்
பொய்யும்புரட்டும் உள்ள இடத்தோங்குவாய்
எத்திசையுங்கெடுத்துப் பழிதாங்குவாய்
ஈபாதவர்கையகப் பட்டுத்தூங்குவாய் (பணமே)

3. மண்ணில்உனைநரர்பண்ணினதன்றி
மனிதரைநீபண்ணினையோ-உயர்
விண்ணினைமண்ணினைப் பண்ணினோன்நேசம்
விலகச்செய்சத்துரு நீயே

எண்ணரிதான இடமெங்கும்ஓடுவாய்
இந்திரஜாலஞ்செய்து விளையாடுவாய்

வண்ணநரர்கள் மனக்கண்ணை மூடுவாய்
வைத்துப்புதைப்பவர் வாயில்மண்போடுவாய் (பணமே)

4. வஞ்சகமாயப் பிரபஞ்சமெல்லாம்நீ
வளைத்துச்செய்வாய்கொடுங்கோன்மை-கெட்ட
நஞ்சம்நிகருனை நெஞ்சம்எண்ணுதமெய்ஞ்
ஞானிகட்கல்லவோ மேன்மை
பஞ்சமாபாதகங் கட்குநீ ஆலயம்
பாரில்துன்பமென்பதெல்லாம் உன் தன்மயம்
அஞ்சஉனையுடையோர்க் கொழியாப்பயம்
வேதநாயகன்மே லுனக்குண்டோஜயம் (பணமே)

---

163-இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி.

பணமேஉன்னுல்என்ன நற்குணமே-பாழுமயலைத்தரும்
பணமேவந்து-பெறுதல்பற்சினமே

அநுபல்லவி.

கணநேரமும்சுருத்துநிலையாகாலங்கழித்துயினரைப்புகழும்
கவனங்கொண்டவர்பாதத் தொண்டுசெய்து
காட்டுகிருய்-எண்ணம்-மூட்டுகிருய்-ஐயோ (பணமே)

சரணங்கள்.

1. அலக்கழித்து யாவரையும்சேர்ந்து
அற்பரிடத்தெலாம் அன்பதுகூர்ந்து
கலக்கமுறவேசெய்கிருய் தேர்ந்து
கண்ணின்முன்னில்லாதே காட்டுமயல்தீதே (பணமே)

2. புத்தியற்ருேரிடம் புதையலாருய்
பூர்த்திசிந்தையில் லார்மேல்தயவாருய்
சத்தியம்நீங்கி அசத்தியமாருய்
சார்ந்தோர்க்கெல்லாம் பொல்லாசற்பனையாருய் (பணமே)

3. உன்னுல்விளைவதற் குண்டுமோகணக்கு
ஊரையெல்லாம்வாயில் போடுவாய்பிணக்கு
நன்றியில்லாரிடம் நடஞ்செய்யுனக்கு
நாட்டமுடனே தின் டாட்டம்வீண்கணக்கு (பணமே)

4. வாதுடன் தீதுபலவும் வாய்த்தாயே
வஞ்சகவாழ்விற்கே துணையதுநீயே
வேதநாயகன் வெறுத்ததமுன்னையே
வேண்டேனுனைக்கையால் தீண்டேன் இனியே (பணமே)

---

## பரஸ்திரிகமனம் விலக்கல்.

164-இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

மாதரைநினையாதே-நெஞ்சே (மாதரை)

அநுபல்லவி.

பூதமேல்பெரும் பாதகமும்விப
ரீதமுமேவரும் ஆதலினால்மறு (மாதரை)

சரணங்கள்.

1. அருமஞ்சட்பூச் சல்லவோமுககாந்தி
அடிக்கடிபெண்கள் நிறமாறும்பச்சோந்தி
ஒருமையாஅவர்களை விரும்புதல்பிராந்தி
உடற்குட்புகுந்துபார்த்தால் வரும்வாந்தி (மாதரை)

2. முன்னழகும் பின்னழகுமேபட்டு
முகஅழகானது நெற்றியிற்பொட்டு
அன்னநடையென்பது கவிஞர்கள்கட்டு
அழகுகில்லாமற் பறந்திடுஞ்சிட்டு (மாதரை)

3. மரித்திடுமாதர்கள்சுகம் அரைக்ஷணமே
மறுநிமிஷத்தில் உண்டாந்துன்பரணமே
பிரித்திடில்மலஜலம் எலும்புதோல்நிணமே
பிராணன்போனால்நரி நாய்பிடுங்கிடும்பிணமே (மாதரை)

4. மேனிமுழுதும் வெளிவேஷத்தின்தளுக்கு
மினுக்கெண்ணெய்பூசியே காட்டுவார்களுக்கு
ஈனம்அறவேதினந்தினந் தண்ணீர்முழுக்கு
இல்லாவிடில்கப்பல் எற்றலாம்அழுக்கு (மாதரை)

5. இடையில்மயக்குவது சாலியன்சேலை
இருகாதில்ஜொலிப்பது தட்டான்வேலை
கடையிலேவிற்பது கொண்டைப்பூமாலை
கன்னிக்குச்சொந்தமெல்லா வெறுந்தோலே (மாதரை)

6. கன்னியர்விழிஉயிர் பிளந்திடும்அப்பு
கனதனம்நமன்குழல் உனைக்கட்டிடுந்தும்பு
அன்னியமாதர்கள் விஷமெனநம்பு
அவருடன்பேசுவதே பெரும்வம்பு (மாதரை)

7. இதமாகவேமணஞ் செய்தசீமாட்டி
இகபரம்இரண்டுக்கு மேவழிகாட்டி
இதரமின்னார்களைச் சேர்வோன்காமாட்டி
என்றைக்கும்அவனுக்கு மூத்தவள்பேட்டி (மாதரை)

8. என்றுங்காமாதுரர்க்கு ரோகங்கள்நிலையே
ஈனரும்போட்டகையில் வேண்டும்வேப்பிலையே
அன்றுகொண்டவன் அறிந்தால்வருங்கொலையே
அற்பசுகத்தில்வரும் ஆபத்துமலையே (மாதரை)

9. கழுவிவாசனைஊட்டாவிடில் கெட்டவீச்சு
காதுவழிஅடிக்கும் இதுநிசப்பேச்சே
தொழும்அழகென்பதெல்லாம் மேற்பூச்சு
தோகையர்கிழமானால் கனஏச்சு (மாதரை)

10. அழகழகென்பதெல்லாம் வெறும்ஜாலம்
அணியும்துணியும்போனால் அலங்கோலம்
விழல்நிகர்சுகத்தினை வெறுப்பதுசீலம்
வேதநாயகன்சொல் அநுகூலம் (மாதரை)

---

## 165-இராகம்-இந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

கேள்மனமே-நான்சொல்வதையநுதினம்-பல

அநுபல்லவி.

சூழ்புவிவாழ்வை சுகமெனநம்பாதே
தாழ்வினைகொடுத்திடும் தாசிகளால்வெம்பாதே (கேள்)

சரணங்கள்.

1. நிரேகமென்பதுகண்ணில் கண்டதுதசையே
நிரோகமவரால்வந்து நோயுறுபசையே (கேள்)

2. நாறும்உடலில்வாசம் நாடோறும்பூசுவார்
சீறும்தனத்தைக்காட்டி செய்கைகண்ணைவீசுவார் (கேள்)

3. சிக்கடித்திடுங்கூந்தல் தினமும்வாரிடுவார்
புக்கும்கடிதடத்தில் புகவேசெய்திடுவார் (கேள்)

4 ஒய்யாரகதைபடித் துலகைவசமாக்குவார்
நையும்படிசெய்துன்னை நமனுக்கிரையாக்குவார் (கேள்)

5. தட்டான்செய்தநகையால் சாடைகாட்டிடுவார்
ஒட்டமரமாகவுன்னை உருக்கியோட்டிடுவார் (கேள்)

6. நலமிலாநாயைப்போல் நாளுமேதிரிவாள்
குலமொன்றிலாமலே கூகைபோல்சரிவாள் (கேள்)

7. பரஸ்திரீகளைகண்ணினல் பார்ப்பதுதோஷம்
நிரமாறியாடைபூண்டு காட்டுவார்வேஷம் (கேள்)

8. பூதஉடல்வளர்க்கபுத்திமயக்கிடுவார்
வேதநாயகன்சொல்லை விரும்பாமல்தியங்கிடுவார் (கேள்)

---

## இதுவும் அது.

166-இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேஉனக்குமகாசுகிர்தம்-மறு
மாதரைநினையாதே (மனமே)

அநுபல்லவி.

தினமென்சொற்படி கேட்டால்உனைத்துதி
செய்வேன்மறுத்திடில் வைவேவைவேன் (மனமே)

சரணங்கள்.

1. சட்டிமுகத்தைச்சந்திரபிம்பமென்றும்-வெறும்
சதைக்கட்டிகளைத்தங்கக்கும்பமென்றும்
முட்டிக்கால்களைச்சொர்னஸ்தம்பமென்றும்-மாதர்
முன்மலைக்குஞ்சபாக்கமபமென்றும்
மொட்டைதலைக்குமுழங்காலுக்கும்பிணைத்தே
முடிந்தாயே-வினை-படிந்தாயே (மனமே)

2. உச்சிட்டதை அமிர்தக்கட்டியென்றும்-நாறும்
ஊத்தைவாயைபவளபெட்டியென்றும்
மச்சப்பீளைவடியுந்திட்டியென்றும்-தே
வாங்குருவைஅபூர்சிட்டியென்றும்
பிச்சைக்காரன்கந்தையைமெச்சிக்கொள்வதுபோல்
பிடித்தாயே-பொய்யைப்-படித்தாயே-கெட்ட (மனமே)

3. செட்டிகளால்அல்லவோ இடையழகு-எண்ணெய்ச்
செக்கார்களால்அல்லவோ-சடையழகு
தட்டார்களால்அல்லவோநடையழகு-மாதர்
தம்மழகெல்லாம்பலகடையழகு
குட்டிச்சுவரில்முட்டவெள்ளெழுத்தோநீ
குதித்தாயே-பெண்ணைத்-துதித்தாயே-கெட்ட (மனமே)

4. சொத்தைபற்களைமுத்துச்சரங்களென்றும்-மிகச்
சூம்பியதோளைமூங்கில்மரங்களென்றும்
சித்தமாகக்கமலக்கரங்களென்றும்-நாறும்
சிக்குமயிரைசலதரங்களென்றும்
பித்தன்போல்வர்ணித்துவேதநாயகன் அடி
பிரிந்தாயே-துன்பம்-புரிந்தாயே-கெட்ட (மனமே)

---

## இதுவும் அது.

167-இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

பெண்ணாசையேபெரும்பித்து-அதில்
பிரமிப்பதெல்லாம்விபத்து (பெண்)

அநுபல்லவி.

கண்ணாலேவலைபூட்டி அற்பசுகம்
காட்டிப்புருஷரைவாட்டிவதைக்கும் (பெண்)

சரணங்கள்.

1. கலகலெனஅசைப்பார் அவர்தண்டை
காட்டுமிருகமயிரே கொண்டை
உலகைமயக்கும் அவர்சேலைக்கெண்டை
உற்றுப்பார்த்தால் நன்மைஉதவாஅண்டை (பெண்)

2. கேவலம் அங்கமெல்லாம் பிணநாற்றம்
கிறுகிறெனமயக்கந் தலைக்கேற்றம்
ஓவியமேனிமினுக்கும் பொய்த்தோற்றம்
உள்ளே திருப்பிப்பார்த்தால் முழுநாற்றம் (பெண்)

3 கட்டிகட்டியாகக்கண் பீளைசாரும்
காதிற்குறும்பிசளி எச்சல்சேரும்
கொட்டும்மயிர்வை தலைப்பேனும்ஈரும்
கும்பிநாற்றமாங் குளித்திட்டநீரும் (பெண்)

4. மண்ணில்எலும்புத்தோல் அல்லவோமாது
மற்றதெல்லாஞ்செட்டி தட்டார்செய்சூது
பெண்ணில்லாவிட்டால் பிழைப்பவர்க்கேது
பெண்ஜெபமும் அவர்போனால்செல்லாது (பெண்)

5. மண்ணிற்பரஸ்திரீயைச் சேரும்நிமித்தம்
வாழ்வுஞ்சுகமுந்தனமும் அநர்த்தம்
எண்ணில்லாத்துன்பமும் புண்களுஞ்சித்தம்
ஈனறும்புக்குமகோற்சவம் நித்தம் (பெண்)

6. இரவிற்கூத்தாடிகள் வேஷம்எடுப்பார்
இருட்டில்எவரும்மயங்கிக் கொடுப்பார்
தரையில்மின்னார்பகல் வேஷம்தொடுப்பார்
ஜாலவித்தைசெய்துகுலத்தைக் கெடுப்பார் (பெண்)

7. உண்டால்விஷம்வெட்டினாற் கொல்லுங்கத்தி
உண்ணினோர்கண்டோரைக் கொல்லும்பெண்சத்தி
அண்டாமல்ஆடவர் ஓடுதல்புத்தி
அமர்வேதநாயகன் சொற்கேட்டால்சித்தி (பெண்)

---

## உய்யும் வழி.

168 இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

உய்யும்வகையிது நெஞ்சே - வேறு
செய்யும்உபாயங்கள்வஞ்சமே

அநுபல்லவி.

மையல்தரும்மலங்களைநீக்கு
ஐயன்பொற்பாதத்துக்குன்னை ஆளாக்கு (உய்யும்)

சரணங்கள்.

1. நிந்தைமலந்த மூவாசையே - நாளும்
நிக்கிரகஞ்செய் அப்பசாசையே
எந்தவிதத்திலு மாசையே - ஒழித்
தென்றென்றுஞ்செய் தெய்வபூசையே (உய்யும்)

2. நான்எனதென் றபிமானமே - மிக
நாட்டுவது மதியீனமே
ஏன்உனக்கிந்த அஞ்ஞானமே - நீதான்
என்றுஞ்செய்வாய் ஜெபத்தியானமே (உய்யும்)

3. பெண்செய் பண்டபதார்த்தமே - பெரும்
பீடையாம் அந்தச்சங்காத்தமே
கொண்ட அறந்தாண்யதார்த்தமே - இதைக்
கூடில்உண்டாம் பரமார்த்தமே (உய்யும்)

4. மையல்மிகுந்து கெடாதே - புவி
வாழ்வென்பது வெறுஞ்சூதே
னையுமெய்யன்பு விடாதே - வேத
நாயகனை நிதம்ஓதே (உய்யும்)

---

169-இராகம்-தன்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

வழியிது உய்வதற்காமோ-பல
மாய்கையுந்தனை விட்டுபோமோ-நெஞ்சே (வழி)

அநுபல்லவி.

அழிந்திடும்மலம் - யாவையுந்தள்ளு
அருள்பெறும்வகைக்காய்-அநுதினம்துதிகொள்ளு (வழி)

சரணங்கள்.

1. வீண்சம்ப்ரதாயங்களை-வெறுப்பாயே
நான்எனும்அபிமானம் நாடிமறுப்பாயே (வழி)

2. வையகவாழ்வு-பொல்லாதே
தையலுடன் தனமும்-சற்றுமில்லாதே (வழி)

3. மாயையில் மலைத்துநீ திரியாதே
தூயநெறியகற்றில் தூய்மைவறியாதே (வழி)

4 செய்யுந்தருமம்நிலை-யாகுமல்லாது
பொய்நிறைவாழ்வின்-பூரிப்போநில்லாது (வழி)

5. பாதகந்தொலைந்திட-பரனடிதேடும்
வேதநாயகன்சொல்லை-விரும்பிகொண்டாடு (வழி)

---

## நெஞ்சொடு பிணங்கல்.

---

### 170-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

அநுதினம்இந்தப்படி-உன்னுடன்போர்கொடுக்க
யாராலாகும்நெஞ்சே (அநுதி)

அநுபல்லவி.

கனபக்தரொடுசேர்ள்ளாய்-கர்மானுபந்தந்தள்ளாய்
தினமும்என்னுரைகொள்ளாய்-சிச்சீ-இதென்னபிள்ளாய் ()

சரணங்கள்.

1. அனந்தமுறைநான்சொல்லக்கேளாய்
அகந்தை அழியாதோ
தினந்தினமும் நீபுரிந்திடுந்துற்
செய்கைகள் ஒழியாயோ-நீ
நினைந்ததே திடமா-உன்னால்
நிதமுஞ் சங்கடமா
சினந்தகவலைக்கு நீஇருப்பிடமா
செய்வதெல்லாம் ஹடமா (அநுதி)

2. படித்ததனிவேதந்தான் சொல்லிய
படி நீநடவாயோ
கடித்தவிஷம் ஒப்பாகியவினையின்
கடலைக்கடவாயோ-நீ
பிடித்ததேபிடியாய்-ஆசைப்
பேயுன்னிடங்குடியா
எடுத்தமாயைக்கு நீமிதியடியா
உன்தொழில் இப்படியா (அநுதி)

கடந்தமேலோர் பகர்ந்தமொழியைக்
கனவினுமறியாயோ
நடந்தபொய்யாகி வழிநீங்கி
நல்லவழிமிதியாயோ-நாம்
உடைந்தஉடல்சதமா-புவிவாழ்
வானதுசாசுவதமா
தொடர்ந்துவேதநாயகன் ஹிதமாய்ச்
சொல்லியுமே மதமா (அநுதி)

---

## துர்குணம்போன்ற நற்குணங்கள்.

### 171-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

செய்யவேண்டுமோனல்-நீஅநுதினம்
செய்-செய்-செய்-மனமே

அநுபல்லவி.

ஐயோவெறுத்தாய் நற்செய்கைகளையே
ஆகையிற்பின்சொலுந் துர்ச்செய்கைகளையே (செய்ய)

சரணங்கள்.

எதிர்உதவிகருதி ஈயாலோபம்
ஈனர்கள்காற்றடிக்கினும் அதில்கோபம்
வதிதீவினைமேல் தீராக்கோபம்
வருவதுவரட்டும் இப்படிப்பாபம் (செய்ய)

அரன்அடிமீதில் அடங்காமோகம்
பலதெய்வங்களைப் பணிபாத்துரோகம்
இரவும்பகலும் புண்ணியந்தன்னில்இராகம்
இப்படியேதான் பாபம்அநேகம் (செய்ய)

பலருக்கும்உதவிசெய்வதில் பலவந்தம்
பரஸ்த்ரீக்கிடம் ஈயாதநிர்ப்பந்தம்
தலமிசைபிறர்க்கிடர் செய்வதில்மந்தம்
தளராதிவ்வகை தோஷம்அனந்தம் (செய்ய)

4. பொய்கொலைகளவுகள் செயஅறியாமை
புனிதர்போல்நாம் இலையென்னப்பொருமை
மெய்விலகிய அவதூறுதராமை
மேன்மேல் இப்படியேபலநீமை (செய்ய)

5. நற்குணந்துர்க்குணம் எனச்சொலும்அசத்தியம்
தன்காரியம்பேணுத அபத்தியம்
நற்கதிபெறுவதில் ஒழியாப்பைத்தியம்
நானிலத்திவ்விதமான துஷ்க்கிருத்தியம் (செய்ய)

6. நன்மைதுன்மைகள் காமக்குரோதம்
நாளும்செய்கையிலே பிடிவாதம்
தன்மநிமித்தம் சர்வலோகவிரோதம்
தளராதிவ்வாறே அபராதம் (செய்ய)

7. ஆட்கொள்வேதநாயகன் பாதமுக்தாரம்
அணியெனஉனக்குரைத்தேன் சவிஸ்தாரம்
கேட்கிலைஆதலிற் கொடுத்தேன்உத்தாரம்
கெட்டசெய்கைகள் உனதிஷ்டப்பிரகாரம் (செய்ய)



## மனவஞ்சகத்தைப்பற்றி.



### 172-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

புரட்டெல்லாம்எங்கே-படித்துக்கொண்டனை
புகலுவாய்மனமே-இந்தப் (புரட்)

அநுபல்லவி.

முரட்டுமார்க்கம் சென்றிறைகிருய்-அணு
முனையின் உள்ளுய்நீ நுழைக்கிருட்-இந்தப் (புரட்)

சரணங்கள்.

1. பொருளைத்தந்தவன் அருளைமறந்து
பொருளுக்கேஉபசாரம்-செய்யும்
மருளர்போல்அற்பப் பொருளைவிரும்பி
வான்பரன்உபகாரம்-தன்னை

மறந்தாய் என்னைத் துறந்தாய் பொன்னைச்
சிறந்தாய் பின்னைப் பறந்தாய் பாரில்
அருளில்லாமல்தேரோட்டுகிறாய்-கன
உதயம்இரவிற்காட்டுகிறாய்-கன
இருள்கொள்பாசத்தில்மாட்டுகிறாய்-நாளும்
எனைப்பம்பரம்ஆட்டுகிறாய்-இந்தப் (புரட்)

2. மண்டலந்தனில்கண்ட பொருளெலாம்
வண்மையென்றுநீகுறித்தாய்-பிர
சண்ட ஆசைக்கள் உண்டதாலேநீ
தலைமயங்கியேவெறித்தாய்-தனத்
தாசினம் பேசிவினை
பூசினையே சீசீ பார
அண்டங்களைக்கை அடக்குறாய்-கால்போல்
ஆழ்கடல்மீதும்நடக்குறாய்-பல
எண்டருவின்னுங்கடக்குகிறாய் புண்யம்
என்றால்எழாமற்கிடக்குகிறாய் இந்தப் (புரட்)

3. என்னசொல்லினும் உன்னல்செய்யாயுனக்
கேனிந்தத்தலைபரட்டை மாளும்
முன்னமேஐபோ பின்னஞ்செய்கிலை
மூளுந்தீவினைத்திரட்டை இது
மோசம்எய்தும் நாசம் வை
லேசம் விசு வாசம் இன்றி
அன்னம்போலெங்கணும்பறக்கிறாய் கல்லின்
ஆவிடத்தும் பால்கறக்கிறாய் சுக
நன்னலந்தனைத்துறக்கிறாய் வேத
நாயகன்சொல்லைமறக்கிறாய் இந்தப் (புரட்)

---

## மனமயக்கம்.

---

### 173-இராகம்-வசந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மயங்கிறாய்மனமே ஐயோவீணே (மய)

அநுபல்லவி.

மயங்கிறாய்மனமே வாழ்வுசொப்பனமே
மாறாமல்தினமே ஐயோவீணே (மயங்)

சரணங்கள்.

1. ஏகனைமோக்ஷத் தியாகனைக்கருணைப்பிர
வாகனைப்பணியாமல் ஐயோவீணே (மயங்)

2. எண்ணியபெரியோர் நண்ணியபொருளாம்
புண்ணியம்புரியாமல் ஐயோவீணே (மயங்)

3. நேயம்உள்ளோர்கள் தாயகன்வேத
நாயகனைத்தொழாமல் ஐயோவீணே (மயங்)

---

174-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீ மயங்குவதேனோ தினம்
மருந்துக்காகினும்நல் வழியில்லாதேனோ ஐயோ

அநுபல்லவி.

அநுதினம்செய்வது அகந்தையேராளம்
அகற்றிடசொன்னாலே வரும்ஹீனமூலம்ஐயோ (மன)

சரணங்கள்.

1. நிலையில்லாவாழ்வினை நிசமாய்நம்பினையெ
தொலையாவிசாரத்தில் துவண்டுவெம்பினையே ஐயோ (மன)
கவலைபேகுடிகொண்டு காலங்கழித்திட்டாயே
அவனியிலுனைப்போன்றஅற்பருண்டோசொல்வாயேஐயோ()

3. நித்தம்துன்பத்தினாலே நீயலைந்தாயே ஐயோ
அத்தன்பதம்வேண்டாமல்அலைந்தனையிதுபொய்யோஐயோ()

4. கருணையென்பதில்லாமல் கரணத்தைக்கெடுத்தாய்
அருணெறியுணராமல்அகந்தையில்படுத்தாய் ஐயோ (மன)

5. விஞ்சையதைவெறுத்து வீணிலேமலைத்தாய்
அஞ்சலெனவந்தோரை ஆதரியாதொலைத்தாய்ஐயோ (மன)

6. போதநாயகனைநீ புகழ்ந்திடாதிருந்தாய்
வேதநாயகனுனை விரும்பில்நீபறந்தாய்ஐயோ (மனமே)

## காலதூஷணை.

——()——

### 175-இராகம்-தர்பார்-ஆதிதாளம்.

பல்லவி.

ஓகோகாலமே-உன்போல்எவர்க்-குண்டிந்திரஜாலமே (ஓகோ)

அநுபல்லவி.

போகமாகவேஅண்டம்பூவெல்லாமேய்வாய்
பூனைபோலிருந்துநீபுலியைப்போற்பாய்வாய் (ஓகோ)

சரணங்கள்.

1. ஊரெல்லாந்தூங்கினும் உனக்கில்லைதூக்கம்
ஓயாமல்ஓடிவா யுனக்குண்டோதேக்கம்
ஆர்கெட்டால்உனக்கென்ன அறியாய்நீநோக்கம்
அதிகவட்டிகள்கொடுப் பவர்க்குன்மேல்ஏக்கம் (ஓகோ)

2. பாலரைக்கிழவராய் பண்ணியேகொடுப்பாய்
பகைமதன்ஜெபம்நட வாமலேதடுப்பாய்
காலிரண்டுடையார்க்குக் கோலொன்றுகொடுப்பாய்
காலனுக்குயிரெல்லாங் காட்டியேவிடுப்பாய் (ஓகோ)

3. ஆயுதமில்லாமல் யாவையும்அறுப்பாய்
அழுதாலுந்தொழுதாலும்அகன்றெம்மைவெறுப்பாய்
சாயுந்திராசுபோலே சகலமும்நிறுப்பாய்
சகலஉயிரையுஞ்சட்டி யிலிட்டுவெறுப்பாய் (ஓகோ)

4. கல்லைப்போல்உடம்பையும் வில்லைப்போல்வளைப்பாய்
கணந்தினம்மதிவாரம் ஆண்டெனக்கிளைப்பாய்
வில்லைப்போல்வதனத்தைச்செல்லைப்போல்துளைப்பாய்
சிங்கமுகியர்க்குத் தேவாங்குருவிளைப்பாய் (ஓகோ)

5. துக்கம்உற்றவர்க்குநீ தொலைபாமற்கிடப்பாய்
சுகமுள்ளபேர்க்குநீ துரிதமாய்நடப்பாய்
விக்கலும்இருமலும் வேதையுங்கொடுப்பாய்
மிஞ்சுங்கருமயிரைப் பஞ்சுபோற்கொடுப்பாய் (ஓகோ)

6. மலைகள்மண்டபங்களை வலிமையாஇடிப்பாய்
வாரிஎழுகடலும் வற்றிடக்குடிப்பாய்
தலைதடுமாறநீதான் கொள்ளைஅடிப்பாய்
தனிவேதநாயகனை தயையாலேநடிப்பாய் (ஓகோ)

## சத்தியோக சம்பந்தக் கீர்த்தனைகள்.

## நியாய பரிபாலனஞ்செய்ய வரவேண்டல்.

---

### 176-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நானே பொதுநீதி தானேசெலுத்திட
நல்லவரம் அருள்கோனே (நானே)

அநுபல்லவி.

தானேயாகிய சாக்ஷாத்காரமே
தேனே அமுதமே திவ்யஞானசாரமே (நானே)

சரணங்கள்.

1. வட்டஉலகில்யாரும் பொதுவில்அநுபவிக்கும்
மழைகால்வெயில்பூகாதி போலவே
இஷ்டர்அநிஷ்டர்தமர் எளியர்செல்வர்பெண்புமான்
என்னும்பேதம் உண்மையல்லலவே
திட்டமாச்சரிநீதி செலுத்தலின்மனம்நாட்டிச்
சிறியவழக்கும்பெருவழக்கெனத்திண்ணம்நீட்டி
சட்டசாஸ்திரங்கள்மிக உணர்ந்தறிவினைத்தீட்டி
சகலஉயிர்களும்என் தன்னுயிர்போல்பாராட்டி
சிட்டபரிபாலன னெனுமுடிசூட்டித்
தீயர்மொழிபுகாமற் செவிவழிபூட்டிக்
கோட்டஞ்செய்துட்டர் கண்ணில்விரலைவிட்டாட்டிக்
கூகூஎனப்போய் கதறப்படிமாட்டி (நானே)

2. அருணன்சந்திரனிலை நீங்கினுந்தரைமேல்கீழ்
ஆயினும்அறத்தைநான் விட்டாமல்
வருணன்போற்பொருள்மாரி வழக்கர்பெய்யினும்அதை
வாங்கயாசகன் போற்கைநீட்டாமல்
வரும்வழக்கர்மனத்தை வன்சொற்களாற்சுடாமல்
மற்றைக்கீழ்உத்தியோகஸ்தர் வம்புக்கிடங்கொடாமல்
அருமடியால்வலக்காராய்ச்சியில்பின்னிடாமல்
அப்பன்பாட்டன்சொன்னாலும் அறநெறிகைவிடாமல்

